# THIRUKKANNAPURA KALAMBAKAM

## (TAMIL)

THIS BOOK IS PUBLISHED
WITH THE FINANCIAL ASSISTANCE
OF
THIRUMALAI TIRUPATI DEVASATNAMS
UNDER THEIR SCHEME
AID TO PUBLISH RELIGIOUS BOOKS

# திருக்கண்ணபுரக் கலம்பகம்

ஆக்கம்—சிறுகுறிப்புரையுடன

கவிரத்ந—கண்டீரவ, செஞ்சொற்கவி [illegible]
அபிநவ பட்டர்பிரான் [illegible]
அபிநவ வித்யாபாஸ்கர
வித்யா ரத்ந
**T. S. ராஜகோபாலன், B. A , L. T.**
முன்னாள் தலைமை யாசிரியர்,
இந்து உயர்நிலைப் பள்ளி
திருவல்லிக்கேணி

விற்பனை உரிமை
**ஸ்டார் பிரசுரம்**
72, பெரிய தெரு
திருவல்லிக்கேணி, சென்னை—600 005

First Edition : Sept., 1990

Number of copies printed : 1000

PRICE : Rs. 18-00



The sale proceeds of this book will be donated to (THIRUKKANNAPURAM) SRI SOURIRAJA PERUMAL KAINKARYA SABHA (REGD)

Sales Right.
STAR PUBLICATIONS
72, BIG STREET
TRIPLICANE, MADRAS-600 005
PHONE : 844740

Printed at: Sri Gomathi Achagam 41, Soorappan Street
Triplicane, Madras-600 005

# PREFACE

Kalambakam in Tamil means a garland of blossoms varying in colour and fragrance. As such in poetry, it denotes a particular class of about one hundred verses varying in metre and ideas and containing situations relating to the greatness of the hero and his realm. According to rules of versification, the poem should contain eighteen essential items like புய வகுப்பு, ஊசல், அம்மானை, messages through bees, birds and clouds, pictures of rustic life and deeds of valour and wonder.

The verses are linked together as a chain, known as அந்தாதி (anthadi), the last word or syllable or letter of each verse forming the beginning of the next and the final verse connected likewise with the first.

This poem is about Thirukkannapuram, one of the 108 holy places sung by Alwars. The kshetra is considered most holy and uniquely fit for penance because of the seven rare items—Kshetra, vanam, puram, tank, vimana, river and the sea. Hence it is an Ashtakshara Siddhi kshetra. The deity, Lord Souriraja, is an impersonation of Ashtakshara and has Himself revealed the mantra to His devotees. The figure of the Lord is considered a jagan-mohana murthi, which has captivated the mind of Thirumangai Alwar

This poem contains references to all these details and brings forth the unique qualites of the deity—Vatsalya, Sousilya and Soulabhya with illustrations from Puranas and Divya Prabandam and rare occurrences in modern days

It is hoped that scholars will find the work upto the mark and enjoyable

AUTHOR

# முன்னுரை

"உலக மேத்துந் தென்னானாய், வடவானாய், குடபாலானாய், குணபால மதயானாய்!" என்றவாறு குணதிசைக்கு மதக்களிறுபோல் விளங்கும் ஸ்ரீ சௌரிப் பெருமாள் எழுந்தருளியுள்ள திருக்கண்ணபுரத்தைப் பற்றியது, இக்கலம்பகம். க்ருஷ்ண க்ஷேத்ரம், க்ருஷ்ணாரண்யம், க்ருஷ்ண புரம், உத்பலாவதக விமானம், நித்ய புஷ்கரிணி, காவிரியாறு, கீழத்திசைக் கடல—ஆகிய ஏழு புண்ணியங்களால் சிறப்புற்ற இத்தலம் அஷ்டாக்ஷர மந்த்ர ஸித்திக்கு ஏற்ற தலமாக முனிவர்களால் பாராட்டப்பெற்றது. ஸ்ரீ சௌரிப் பெருமாள் அஷ்டாக்ஷர மயமான திருமேனி வாய்ந்தவர்; திருவஷ்டாக்ஷரத்தைத் தாமே நேரில் தமது அடியார்க்கு வெளியிட்டவர். இவரது திருமேனி ஜகன்மோகனத் திருமேனி. இவரது கட்டழகில் ஆழ்ந்த திருமங்கையாழ்வார், "கண்டவர், தம் மனம் வழங்குங் கண்ணபுரத் தம்மான்," 'தான வணங்குங் கண்ணனைக் கண்ணபுரத்தானை" என்று இசைத்துள்ளார்.

இந்தத் தலத்தையும் இதிலுள்ள திருக்கோயிலையும் நிருமித்தது உபரிசரவஸு என்ற சேதிவேந்தன. இவன தனது மகளாகிய பத்மினியை இப்பெருமானுக்குக் கன்னிகா தானஞ் செய்தான; இப்பெருமானிடம திருமந்த்ர உபதேசம் பெற்றான.

இத்தலத்தின மேனமையையும், இப்பெருமானது கல்யாண குணங்களையும் விவரிப்பது இக்கலம்பகம்.

பலவகை மலர்களால் அழகுறத் தொடுத்த கலம்பக மாலை போல், பலவகைப்பட்ட பாக்கள், பாவினங்கள், சுவைகள் அமையுமாறு தொடுக்கப் பெறுவதால், இவ்வகை நூல் கலம்பகம் எனப்பெற்றது போலும். ஒருபோகு, வெண்பா, கலித்துறை இவை முதலுறுப்பாகவும், பினனர் புயவகுப்பு, மதங்கு,

அம்மானை, காலம், சம்பிரதம், கார், தவம், குறம், மறம், பாண், களி, சித்து, இரங்கல், கைக்கிளை, தூது, வண்டு, தழை, ஊசல் ஆகிய பதினெட்டு பொருட்கூற்றுறுப்புகளும் இயைந்து, மடக்கு, மருட்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா, ஆசிரிய விருத்தம், கலிவிருத்தம், கலித்தாழிசை, வஞ்சி விருத்தம், வஞ்சித்துறை, வெண்டுறை என்ற கவிகளூறு களும் அமைந்து இடையிடையே வெண்பா, கலித்துறை கலந்து, அந்தாதித் தொடையில் இறுதியும் முதலும் மண்டலித்துப் பாட வேண்டுமென்ற வரம்பின்படி இக்கலம்பகம் அமைந்துள்ளது.

பெரியோர்கள் இதனை ஆதரித்து எளியேனை ஊக்குலிப்பர் என நம்புகிறேன்.

ஆசிரியன்

# குலமுறை

மாறன் மறைக்கட லீட்டினைக் கச்சி
மாற னருளால் வளர்த்தவ னான்றோன்
நலனுடை நாலூ ராச்சான் பிள்ளைதன்
குலந்தனிற் கண்ண புரந்தனில தோன்றிய
செல்வன சௌரிப் பெருமா ளெனப்பெயர்
செல்லுஞ் செமமல், சௌரிப் பெருமாள்
பொன்னடி போற்றும் புனிதன், கலைவலன்;
இன்னவ லுதரத் தெழுந்த வுத்தமன்
தொனமொழிப பரவையுந தெனமொழிப் பிரசமும்
தன்மன மடுத்தவன, தருக்கமீ மாம்சை
விழுமிய வேத முடிவத னோடும்
பழுதறக் கறறவன, கணண புரத்துறை
மாலொடு மாலிருஞ் சோலை யழகனும்
காலையி லேற்குஞ் சுப்பிர பாதமும்
ஐயன சௌரி ராசன துதியொடு
நொய்யிடைப் பதுமினி பரிணயம் நுவலும்
எந்தை சீனி வாச னிணையடி
சிந்தையிற சேர்த்துச செறிநததோ ரருளால்
உளந்தனி லூறும் மதுவை மாலினை
வளர்ந்தெழு மனபின வழுத்தினன்
கலினடர் கலம்பகக் கவிதை பெருகவே.

# பாக்களின் துவக்கம்

| | | | |
|---|---|---|---|
| 1. | சீரோங்கு | 31. | இனறு செனறு |
| 2 | நான்மேலி | 32. | தீயினை |
| 3. | அடியால் | 33. | சுடரிலங்கு |
| 4. | தாயாய் | 34. | வருபுனல் |
| 5. | வானோங்கு | 35. | ஆரா வனபின |
| 6. | அடிமுதலே | 36. | இனலிடைகள் |
| 7. | ஆர்தரும | 37 | கால மிகநதானும் |
| 8. | கோமான | 38. | புரவி தடிநத |
| 9. | உகந்து | 39. | வாடி நின்ற |
| 10. | நகரவரு | 40. | செய்ய கரநீட்டி |
| 11. | புயங்க வணையாய்! | 41. | வைய மிரந்தான் |
| 12. | மதியாத | 42. | களித்துவரும் |
| 13. | நிலையாது | 43 | புள்ளும் |
| 14. | உறுதவங்கள் | 44. | வரமருளும் |
| 15. | வாராய் | 45. | இனித்தமொழி |
| 16. | வாயும் | 46. | ஊசலென |
| 17. | எனறு வருமோ | 47 | பணியாக் கயவர் |
| 18. | எல்லிடைவாய் | 48. | பெரும்பதத்த |
| 19. | கடியாரும் | 49. | அளிக்கும் |
| 20. | ஆமே மதுகரமே | 50. | செய்ய் வைங்கணை |
| 21. | தரியா | 51. | சுழற்கால் |
| 22. | ஏனத் திருவுருவன் | 52. | தீயாய் |
| 23. | மானதன | 53. | செய்யகண் |
| 24. | நல்லா ளிடைச்சி | 54. | வையணை |
| 25. | மாவி லேறி | 55. | வைநுதித்தனி |
| 26. | தாளிணை | 56. | வித்ததாய் |
| 27. | மண்ணில் | 57. | தித்திக்கும் |
| 28. | நாகமது | 58. | தோய் முகில் |
| 29. | போந்தேன் | 59. | உற்றவிரு |
| 30. | உகந்தடைமின் | 60. | ஞாயி றுறைவார் |

61. கண்ணபுரத்தார்
62. முத்தமிழின்
63. பொழிமத
64. உரையாய்
65. பொலிபொழில்
66. பொன்னெயில்
67. என்னென்
68. உளமுறை
69. கொடிகணைவுற
70. வினையேன்றன்
71. விரைமலர்
72. வரவுந்தி
73. திக்குமலிபுகழ்
74. சிறப்புயரும்
75. மானார்
76. போதமர்
77. பூங்கணை
78. ஓரில்
79. பரவுறு
80. தேனினும்
81. கண்ண புரஞ்சேர்
82 மினனெழு
83 சொரிமழையை
84. மன்னு பறைகறங்க
85 உயிரனையார்
36. கண்ணபுர
87. மறைதந்த
88. துயர்தனை
89. மேலணவு
90. களங்கனி
91. பாயும் புள்
92. துணிவுடனேன்
93. மன்னும் பெழில்வாய்
94. பால்வழியும்
95. பாயபுகர்
96. ஓங்குதிரை
97. மேலாம் பிறவி
98 மேயையுலகில்
99. கற்றவர்
100. பெரும்பரிவால்

# வாழ்த்துப் பாக்கள்

## 1. ஆசாரியன்

வரவர மாமுனிவன்
திருவடித் தாறனைய
குரவரன பொன்னடியென்
சிரமணி செம்மணியே.

## 2. மணவாள மாமுனிவன

காவிரி யாறணை கடிநகரக்
கோவிரி யனபுடன கொண்டாடப்
பாவிரி யீடு பகர்முனிவன்
பூவிரி பொற்கழல் போற்றுவனே.

## 3. எதிராசா

இருளட ருலகினர்க் கிடர்கெட வந்தவன்
அருளினுக் காகலி அருந்தவர்க் கதிபதி
விரிதர மறைப்பொருள் விளம்பிய வித்தகன்
இருபத மினறியோர் புகலிலை யெமக்கே.

## 4. பெரியாழவாா

வீங்கும் புனல்பால் மிளிருந் தளிரினில் மேயாற்குப்
பாங்காய்ப் பரிவில் துளவத் தாரொடு பாவமுதும்
யாங்கும் புகழ்வா யணங்கு மளிக்கு மருந்தகையான்
ஓங்கு மொளிகொள் பதமே பரவுமென னுள்ளத்தே.

---

1. குரவரன்—வானமாமலை சீயர். இவர் வரவரமுனிவனின் திருவடித் தாறு, பாதரேகை. என் சிரம் அணி (சூடுகின்ற) செம்மணி. 2 வரவரமுனிவன் ஸ்ரீரங்கநாதனுக்கு ஈடு அருளினான.கடிநரம் ஸ்ரீரங்கம்,கோ—இறைவன். பா—திருவாய்மொழி. ஈடு—முபபததாறாயிரப்படி வியாக்யாநம் 3. எதிராசா மறையின் கருத்தை விவரித்து உலகினரை உய்வித்தார். ஆர்கலி கடல். 4. பெரியாழ்வார், திருக்கண்ணபுரப் பெருமானை மங்களாசாஸநம் செய்துள்ளார். வீங்கும் மேயார்—வடபத்ரசாயி. தார்—மாலை, பாவமுதம்—திருமொழி. யாங்கும்... அணங்கு—ஆண்டாள்.

5. குலசேகரப பெருமாள

என்று பிராமன் புகழ்பாடு
மீடி லடியா ரீட்டங்கள்
மன்று ளெங்கும் மலிந்தடகும்
வன்னார் கொல்லிக் குலவேந்தே!
கன்றின் கணங்கள் மேய்த்தானைக்
கனிந்து துயிலத் தாலிசைத்தாய்
இன்றென பாலே யிவனைநோக்க
என்னே யுணர்த்தும் வகையுண்டோ?

6. திருமஙகையாழவாா

எழுசீ ரிலங்கு கவிபெய்த மனன'
என்பா லுகந்து முனனீ
வழுவேது மின்றி வலிகொண்டு கொண்ட
மனுவோடு, மல்கு மடைபாய்
உழுநீ ருழனறு வெணசங்க முய்த்த
வொண்முத்தி னோங்கு புகரோ
டெழிலோங்கு கண்ண புரநதோயு மெந்தை
புகழோது புந்தி யருளே.

7. நமமாழவாா

மாலே வளர்ந்து மாலுக்காம்
பக்தி செய்வீர் வல்லீரேல்
சால வெளிதாஞ் சரணென்றே
இவனைச் சார்த லிதுதனினும்
மேலாம் நாம மொன்றோத
லென்று விளம்பும் மகிழ்மாறன்
கோலப் பதங்கள் சென்னியிலே
சூட்டி யுய்வே னெளியேனே.

---

5. குலசேகரப பெருமாள் தாலாட்டு இசைத்தார். இப் பெருமானைப பள்ளி உணர்ததுமாறு கோருவது. தால்—தாலாட்டு. 6. திருமங்கை யாழ்வாரிடம் வேண்டுவது. பெருமானைக் கவிபாடும ஆற்றல் அருளுமாறு. முனம்நீ—முன்பு நீ. வலி—வலிமை; வாளால் வலிமை. மனு—திருவெட் டெழுத்து, ஊரின பெருமை. முத்துக்களின ஒளி, எழில் அடர்ந்தமை, 7. நம்மாழ்வார் பெருமானைப் பெறும்வகை வெளியிட்டார். பக்தி, சரணாகதி, திருநாமம் ஓதுவது. மால்—பிரேமம்.

8. சேனையர்கோன்

அம்புயத் தோயு மாயிழை நோக்கும்
அம்புவி யாணகை யோடு
வம்பவிழ் கோதை வாணுதல் நீளை
மதலையும் மகிழ்வினில் மாந்தும்
அம்புத வண்ணன் கண்ணொளி கண்டே
அம்பரம் நிலனொடு காக்கும்
செம்புயச் செல்வன சேனையர் கோமான்
சேவடி யென்றன சிரஞ்சேர்ப்பன்.

9. கருடன

கறையுடை நாகந் தன்னைக் கதிரடர் மார்பி லேற்றுச்
சிறையினை யொலித்துக் கூர்வா யுகிரொடு துண்டம் நீட்டி
இறையவன் றன்னைக் காக்கு மிணை பிலாப் பரிவு வாய்ந்த
கருடனின் நாம மோதிக் கடுவினை களைய லாமே.

10. ஐமபடை

சுடரடர் மணிமலி பணிதனி னுடலமர் சோதியதன்
மிடலடர் கையினில் மனனிடு கதையொடு வில்லதுவும்
படையொடு நுதியுடை யழலுமிழ் பரிதியு மொண்சங்கும்
கடிதினிற் காப்பதற் காவன கண்ணெனக் கண்ணனையே.

11. தலததினா

பத்தியெழப் பரமனடி பாடிவரும் வழிவந்து
சித்தமெலாந் தெளிந்தவர்சேர் திருக்கண்ண புரம்வாழ்வோர்
நித்தமவன் புகழோதும் நிட்டையினர் சேவடியென்
வித்தமெனச் சிரஞ்சேர்ப்பன் சன்மவிடாய் வீய்தற்கே.

---

8. இத்தலத்தில் சேனாபதி யாழ்வானுக்குத் தனிப் பெருமை. பெருமானின் ஆணை யேற்று, அவன் செய்யும் தொழில்களை இவர் செய்வார். அம்பரம் வானுலகு. 9. கருடனது பரிவு. பெருமானது சக்தியை மறந்து, அவனுக்கு என்ன நேருமோ என்றஞ்சி, அவனைக் காப்பதில் ஊன்றியிருப்பது குறிப்பு. இப்பரிவினால் கருடனைக் கருடாழ்வான் என்பர் இதேபோல் திருவனந்தாழ்வான். கறை—விஷம். உகிர்—நகம் துண்டம்—அலகு 10. பெருமான் ஏந்தும் சங்கு, சக்கரம், வில், கதை, வாள் இவையும் பரிவு வாய்ந்தன. பணி—நாகம். மிடல்—வலிமை. படை—வாள். நுதி—கூர்மை.

### 12. பாட்டனார்

பிறிதெதுவும் பேணாமற் பேரன்பாற் பெருமான்றன்
திறைபுகழே நினைத்தற்காம் நிதியென்று நியமித்த
புரையிலதாம் புகழுடைய பாட்டனறன பதந்தோய்ந்து
வரையிலவாம் பணபெல்லாம் நாளோதி மகிழ்வேனே.

### 13 தநதையாா

சுவையூறுஞ் செந்தமிழுந் தொன்மொழியுங் கற்றுப்பல்
லவையேறு தீங்கவிக ளச்சுதற்கா யாத்தளித்தான
புவியேறு புகழுடையா னெந்தைதளிப் புகழேயென
செவிசேரு மமுதாமே சிந்தையடர் தேனாமே.

### 14. ஙனறிபபா

தேனிற் சிறந்த தமிழில் திளைக்கும்
மானப் புகழார் மன்சகந் நாதன்
தானற் பரிவினில் தந்தான தமிழின்
பானற் பரிவே படர்தர வெற்கே.

---

12 பாட்டனாரால் பெற்ற பேறு பெருமா புகழையே நினைக்கவென்று அவா நியமித்தது புரை—ஓ பதம் திருவடி. 13 தந்தையாரது மேன்மை. இருமொ புலமை அச்சுதற்குப் பாக்கள புனைந்து அளித்த தொனமொழி—வடமொழி. அவை—சபை. 14 தமி எளியேன பெறற ஆர்வத்திற்குக காரணம். புகழ்பெ தமிழ் அன்பரின் தலைவன; அதாவது இவர்களுட் சிறந்தவ தமிழின்பால் நல்பரிவு எனப் பிரிக்க,

# நூல்

## 1. மயங்கிசைக் கொச்சகக் கலிப்பா

சீரார் மரவிந்தச் செம்மலரில் வந்தவடன்
ஏரார்ந்த கண்ணெழிலிற் கண்பதித்த காஞ்சனமே!
பொறையுருவாம் புவிமாதினசெந்துவர்வாய்ப் பொலிவிடையே
விரிதருமோர் வெண்ணகைக்குத் தோற்றபுகர் மரகதமே!
புதுவைமனன் பெற்றளித்த பொற்கொடியின் பூங்குழலில்
பதியமனம் வைத்துகக்கும் மாமணியே! கற்பகமே!
வானூர்மன் மகளாகும் கோமளத்தின் மாமைதனை
ஆனாத போகமென ஆர்ந்தொளிரும் பரம்பொருளே!

காவிரியின் புனலேறக் கவினூருங் கூலத்திற்
பூவிரியும் பொழிலடர்ந்து பொறிவண்ட ரிளிபாட
நீலமுகில் துளிதூவி நின்றதிர் முரசமெனப்
பீலிமயிற் குலமாடக் குயில்கூவ வானவர்கோன்
வாசவனும் மாதிரத்த பாலகரும் வாழ்த்தொலிப்பத்
தேசடருந் தவமுனிவர் திரண்டெங்குஞ் சயமோத
வானுயரப் புகரெறியும் மணிமதிளின நன்னடுவுள்
தானடருஞ் செவ்வியிடைச் சார்ந்தொளிருங் கோவேகேள்.

---

1—16. எட்டடித் தரவுகள் இரண்டு.

1—8. பிராட்டிமார் நால்வருடன் பெருமான். திருமகளின் கண்ணழகு; புவிமாதின் முறுவல்; ஆண்டாளின் குழலழகு; பதுமினித் தாயாரின் மாமை. காஞ்சனம்—பொன். செந்துவர் வாய்—சிவந்த பவளம் போன்ற உதடுகள். நகை பல்லின் ஒளி, புகர்—ஒளி. வான் ஊர் மன்—உபரிசரவஸு என்ற வேந்தன். மாமை—அழகு; மேனி. ஆனாத—அழியாத.

9—16. நகரின் சிறப்பு. கவின்—அழகு. கூலம் கரை. பொறிவண்டர்—பொறிவண்டு. இளி இசை. மேகம் ஒலி செய்ய, மயில் ஆடக் குயில் கூவும். பெருமானை வாழ்த்து வோர்: வாசவன்—இந்திரன். மாதிரம்—திசைகள். புகர்—சோதி. மதிள்: வெள்ளியேய்ந்த மதிள், செம்பொனேய்ந்த மதிள், மணிபொனேய்ந்த மதிள்—என்றார் நம்மாழ்வார்.

பலகடல்கள் செதிளடங்கப் பரந்ததுநீ மீனாக
உலகடங்க வுய்தற்கே ஓதுவைநீ வேறுளதோ?

பொருகடலுள் தேவருடன் பொருப்பலைத்துப் பூமகளை
வரையகலத் தேற்றதுவும் மண்ணுய்ய வேயன்றோ?

அரியுருவாய்ப் பொன்பெயரோ னணியாகங் கீண்டதுவும்
தெருளொளியின் சிறுபிள்ளை தனைக்காக்க வேயன்றோ?

உலகிரந்து மேலோங்கிவளர்ந்ததுவு மும்பர்பால்
அலகிறந்த பரிவாலே யன்றியொரு பரிசுண்டோ?

மாதவற்காச் சிலையுயர்த்து மன்னவையிற் சிலையிறுத்து
மாதவளைப் புணர்ந்ததுவும் மண்ணுய்யு மாறன்றோ?

பேராய ரிளங்கன்றாய்ப் புவனியிலே வளர்ந்ததுதான்
ஓராத வுலகுக்கோ ருறவாக வொளிர்ந்தன்றோ?

இருகதிர் வெருவுற வெழுசுட ராயினை,
பொருதிரை விரிகடல் பொருவென நின்றனை.

பொருமல ரிணையெனப் பொலிதரு விழியினை,
உருவிலி சிலையென வொளிர்தரு நுதலினை.

---

பலகடல்கள் . ஒளிர்ந்தன்றோ; ஈரடித் தாழிசைகள் ஆ

பலகடல்கள்: கடலின் பரப்பு, பலகடல்கள் இணைந்த
போல. மீனுருக் கொண்டபோது மீனின் அளவு; பரந்து—
பரப்பில் முழுதும் அடர்ந்து. உய்தற்கு: மறைகளை மீட்
அளித்ததால். பொருகடல் பாற்கடல். பொருப்பு—மந்தரமலை
பூமகள்—லக்ஷ்மி. வரை அகலம மலைபோல் திண்ணி
மார்பு. உய்ய: இவளது கருணையாலே. அரி—சிங்க
பொன்பெயரோன்—இரணியன். தெருள் ஒளியில்—சிறந்
ஞானத்தால் ஒளி வாய்ந்த. உம்பர்—வானோர். பரிசு—வகை
மாதவன்—விசுவாமித்ர முனிவன். மன் அவை—மன்ன
அடர்ந்த சபை. மாது அவளை—சீதையை. மண் உய்
இவளைப் பற்றிய இராமாயண காவியத்தைக் கற்பதா
"ஸீதாயா: சரிதம் மஹத்." ஓர் உறவாக — கண்ண
"நான் உங்களுக்கு உறவு" என்றான்.

இருகதிர் குழம்பினை ஈரடி அராகங்கள் நான்
பெரும்பாலும் குற்றெழுத்துப் பயின்று வருவன.

அரிதொரு துகிரென வணிகெழு மிதழினை,
விரிதரு தளவமும் வெள்கிடு நகையினை,

இணையன மௌவசை யெழில்மணிக் குழையினை,
வணநுதல் மிசைவனை மான்மதக் குழம்பினை.

திசைமுகனுன் னடிவிளக்கச் சேண்பால்நீ தாயதுவோ
நசையுளதால் நம்பாலென் திருநிலமும் நவிலாதோ?

பொருமுனையில்வளையேந்திப்பொற்கதிரை மறைத்ததுதான்
விரிவுறவே தருமநெறி யென்றடியார் விளம்பாரோ?

..............................

இருகதிர் ஆயினை. பெருமான் "அச்யுத பானு." அறிவின்மையாகிய இருளை யகற்றுபவன். இருகதிர்—சந்திரனும் சூரியனும். வெருவுற—அஞ்ச; பெருமானின் பேரொளியாலே. எழுகதிர்—உதிக்கும் சூரியன்.

பொருதிரை நின்றனை: திருமேனியின் நிறம் குறிப்பு. பொருதிரை—ஒன்றோடொன்று மோதும் அலைகள். பொரு என—ஒப்பாகுமென்று.கடல் என்பதால் காம்பீர்யமும் குறிப்பு.

அரிதொரு துகிர் என: உதடுகளின் அழகு. துகிர்—பவளம். அணிகெழு—அழகு வாய்ந்த. இதழ்—உதடு.

விரிதரு நகையினை பற்களின் ஒளி; (முறுவல்) தளவம்—முல்லை.

இணையனம்...: மகரக் குழைகள். இவை இரண்டும் அன்னங்கள் போல் அசைவன. அனம்—அன்னப்பறவை.

வணநுதல்.... : நெற்றியில் கஸ்தூரித் திருமண் காப்பு. வண நுதல்—வண்ண நுதல், அழகிய நெற்றி. மான் மதம்—கஸ்தூரி.

திசைமுகன் ... பகராரோ — நாலடித் தாழிசைகள் நான்கு.

திசைமுகன் நவிலாதோ? நீ உலகளந்தபோது உன் திருவடி உலகினர் தலையில் பதிந்தது; இது உனது விருப்பத்தால்; உலகினரைத் தூயோராக ஆக்குதல் விருப்பம். நசை—விருப்பம். திசைமுகன்—பிரமன, சேண்—ஆகாயம்.

பொருமுனையில் விளம்பாரோ — பாரதப் போரில் கையில் ஆழி கொண்டு சூரியனை மறைத்தது. பொருமுனை—போர்க்களம். வளை—சக்கரம். பொற்கதிர்—சூரியன்.

கவிமாவின் மீதூர்ந்து கவிவலியைக் காய்ந்ததுவுன்
சலியாத அருளுக்கோர் சான்றாகு மென்னாரோ?

வானிழந்த வாசவற்கு வானளித்த தெண்ணிலவன்
பானிறைந்த பாசத்தா லென்றுலகோர் பகராரோ?

ஊழிநீ வானுநீ யுலகுநீ தீயுநீ
ஆழிநீ காலுநீ அகிலமுந் தானுநீ

உயிருநீ மெய்யுநீ உயிர்தமக் குறைவுநீ
செயிரிலாச் சொல்லுநீ செவ்விதாம் பொருளுநீ.

தசரத னுதர முதித்தனை,
தசமுக னுரம தழித்தனை.

தாய்முலை சுவைத்துளங் குளிர்ந்தனை,
பேய்முலை சுவைத்துயிர் கவர்ந்தனை.

---

கவிமாவின்.. ; உலகுக்குப் புரிந்த நலம், கவியை மாற்றியது. கவிமா—குதிரை. சலியாத—அசையாத; நிலையான.

வானிழந்த .: இந்திரனுக்குச் செய்த உதவி. வான் இழந்த—மகாபலியால் தனது பதவியை இழந்த. எண்ணில், அவன் பால் அடர்ந்த—.

ஊழிநீ பொருளுநீ : நாற்சீரடி அம்போதரங்கள் இரண்டு. பெருமானது பெருமை; யாவும் இவனது உடைமை, இவனால் இயங்குவன.

ஊழி—ஊழிக் காலம். வான, உலகு, தீ, கடல், காற்று ஆகிய பூதங்கள் உனக்குட்பட்டவை. ஆழி—கடல். அகிலம்—யாவும்.

உயிரும் நீ—உயிர்கள் உனது உடைமை. மெய்—உடல்; நீயே உலகம், ஆதலால் உடல்களும் நீயே. உறைவு—உறையுமிடம்; உயிர்களை வயிற்றுள் ஒடுக்கிக் காப்பதால். செயிர்—குற்றம். சொல், பொருள்—இவை நீயே.

தசரதன்...கவர்ந்தனை. முச்சீர் ஓரடி அம்போதரங்கம் நான்கு.

தசரதன் .அழித்தனை இராமாவதாரம். உதரம்—வயிறு. தசமுகன்—இராவணன. உரம் அது அழித்தனை. உரம்—வலிமை.

தாய்முலை...கவர்ந்தனை: க்ருஷ்ணாவதாரம்.

பாரு மிழ்ந்தனை;
பார ளந்தனை.

மீனுரு வாய்ந்தனை;
மீனுறப் பாய்ந்தனை.

கேழ லாயினை,
கேழி லாயனே!

ஓதஞ் சாய்ந்தனை;
ஓதங் காய்ந்தனை.

ஆனை காத்தனை,
ஆனை மாய்த்தனை.

மலையு யர்த்தனை,
மலையு றைந்தனை.

வேதம் விரித்தனை,
போதம் நிறைத்தனை,

அமிழ்து முகந்தனை,
தமிழை யுகந்தனை

எனவாங்கு

வேத நாவினர் வியன்தமிழ்ப் பாவினர்
போதக் கடலினர், போருவில் நெறியினர்

---

பாருமிழ்ந்தனை .... உகந்தனை: இரு சீரடி அம்போதரங்கம் பதினாறு.

பார் — பூமி. மீனுரு மீனாய் அவதரித்து மீன் உற — விண்மீன்களின பாற் சேருமாறு கேழல் — வாரகம், கேழில் ஆயன் — ஒப்பில்லாதவனாய் ஆயர்குலத்தில் பிறந்தவன். ஓதம் — கடல். சாய்ந்தது, காய்ந்தது — இராமனாய். கடற் கரையில் சாய்ந்தது, வருணபகவானை நினைத்து ஆனை — கஜேந்த்ராழ்வான; ஆனை – குவலயாபீடம் மலை; கோவர்த்தனம்; திருவேங்கடமாமலை, வேதம் விரித்தனை — வேதப்பொருளைப் பரவச் செய்தாய். போதம் — அறிவு. அமிழ்து முகந்தனை — பாற்கடலைக் கடைந்து தமிழ் - ஆழ்வார்களது திவ்யப்பரந்தம் இதை உகந்து மார்கழித் திருநாளில் திருச்செவியிலேற்பாய்.

இரவுநன் பகலு மிறைஞ்சி யிணையடி
பரவக் குணபாற் பரவையில் தோய்ந்த
விலங்கல் வாழ்த்திட வேத மேனியன்
கலங்கா மனத்தனாய்க் கைகுவித் தேத்த
ஊனுல ருடலின ரொளியெழ வுறைதரும்
வானுய ருத்பலா வதக விமானத்
துடனமர் தேவிமார் நால்வரின புகரிடைக்
கடனிகர் ‹மேனி கவினது பரப்பிக்
கணபுரந் தோய்ந்த கருமணி! உன்னை
வணமுற நாவால் வழுத்துவன் நானே.

---

எனவாங்கு . தனிச்சொல்.

இதுவரையில் பெருமானது பெருமையை விவரிப்பது. இவ்வாறு விவரிப்பவர், அடியார்.

வேத நாவினர் நானே சுரிதகம்

"யத்ர ருஷய ப்ரதமஜா யே புராணா:" என்றவாறு, பரமபதத்து நிலைபோலே இங்கும். வியன் தமிழ்ப் பாவினர்—பெருமானும் வியக்குமாறு தமிழ்ப்பாக்கள் பாட வல்லவர். "தின்றனக்குங் குறிப்பாகில், கற்கலாம் கவியின் பொருள் தானே" என்றார் திருமங்கையாழ்வார், பத்தராவிப் பெருமான் முன்பு. குணபால் — கிழக்கில், பரவை — கடல், விலங்கல்—மலை. கீழ்த்திசைக்கடலில் ஆழ்ந்துள்ள கருட பர்வதம் பெருமானை வாழ்த்த, வேத மேனியன்—கருடன், பெருமான் முன் கைகுவித்து நிற்கின்றான். ஊன் உலர் உடலினர் — தமது உடலைப் பேணாமையால், மாமிசம் வற்றி என்புமயமாக இருப்பவர். இவர்கள் உறையும் விமானம் உத்பலாவதகம்; ஆங்கு உறைந்து எப்போதும் பெருமானைத் தொழுது கொண்டிருப்பவர். தேவிமார் நால்வரின் புகரிடை: முதலில் விவரித்துள்ளவாறு. கடல் நிகர் மேனி கடல்போலும் கறுத்துப் பரந்துள்ள திருமேனி, கவின் — கட்டழகு கருமணி! "கணபுரத்தென் கருமணியே" (குலசேகரப் பெருமாள்). வணம் உற நன்மை பெற. வணம் — வண்ணம்· நன்மை, சிறப்பு, இசைப்பாட்டு. நாவால் நாவைப் பெற்றதன் பயனாக.

## 2. இருவிகற்ப நேரிசை வெண்பா

நான்மேவி நாடுவதும் நாவடர ஓதுவதும்
ஆன்மேய்த் தடவி யலைந்துலவுங் — கோன்மேய
கண்ண புரந்தானே காண்பதுவோ தூக்கத்தும்
அண்ண லவன்சே வடி.

## 3. கட்டளைக் கலித்துறை

அடியால் நடந்தே யவுணர் தலைவ னகம்புகுந்தாய்
அடியா லவனி யளந்தாய் விசும்பி லடர்ந்தெழுந்தே
அடியா லணைந்தனை யன்ன முயர்த்தவ னம்புனலை
அடியா லகலிட முய்ய வளித்தா யருந்தனமே.

## 4. அறுசீராசிரிய விருத்தம்

தாயாய்த் தந்தை யாசானாய்த்
தாயங் கிளையு மானானுந்
தீயாய்ப் புனலாய் நிலனாகிச்
சேணுங் காலு மானானும்
வீயா வரக்கர் மாய்த்தானும்
வேத நெறியே விரித்தானுங்
காயா மலரின் வணங்கொண்ட
கண்ண புரத்தா னாவானே.

---

2. இத்தகைய திருக்கண்ணபுரத்தை நான் விரும்புவேன். பெருமானைக் கனவிலும் காண்பேன். மேவி — விரும்பி; ''நம்பு மேவு நசையா கும்மே.'' ஆன் — பசு, எருமை முதலியன. அடவி — காடு. கோன — அரசன், இடையன். அண்ணல் — பெருமையுடையவன்.

3. வாமனனாய் இப்பெருமான் செய்த நலம். நடந்து — சிறு பிள்ளையாய் மெள்ள நடந்து. அகம் புகுந்தாய் — உனக்கு ஏதாவது கொடுத்தேயாக வேண்டும் என்று விரும்பு மாறு செய்தாய். அவனி — பூமி அன்னம் உயர்த்தவன் — அன்னத்தைக் கொடியிலுடைய பிரமன். அம்புனல் — திருவடியை விளக்கியதால் தூய்மையுற்ற நீர்; ஆகாய கங்கை யாகப் பெருகியது இது. அகலிடம் — பரந்த பூமி.

4. ''ஒரு நற்சுற்றம், எனக்குயிர் ஒண்பொருள்''. நமக்கு எல்லா உறவுமானவன். சேண் — விசும்பு வீயா — அழியாத நெறி விரித்தான் : தான் அவதரித்தும் சான்றோர் மூலமாக விளக்கியும். காயாமலர் — பூவைப் பூ.

### 5. எழுசீராசிரிய விருத்தம்

வானோங்கு திண்மதிலும் பொன்மதிலும் வனமோங்கு
மணிமதிலும் நாற்பா லோங்க
மீனோங்கு தண்புனலில் விரையோங்கு மரவிந்த
நிரையெங்கும் விரவி யோங்க
மானோங்கு நோக்கியர்பூ மங்கைபுவி மங்கையர்தம்
மணநோக்க மிருபா லோங்கத்
தானோங்கு புகரோடு நின்றபரன் தாளன்றிச்
சார்வறியே னடிய னேனே.

### 6. எண்சீராசிரிய விருத்தம்

அடிமுதலே மலர்புனையும் மரங்கள் தம்பால்
அமர்ந்தினிய குரலாலே குயில்கள் கூவ
கடிமலர்கள் தாமுகுக்கும் பிரசந் தன்னைக்
களிவண்டு தாம்பருகிப் பண்கள் பாட
வடிவமைபு மெகினத்தி னிணைக ளெங்கும்
வளர்கமல மலரேறி யூச லாடக்
கடிமதிளின நடுநடுவே மாட மோங்குங்
கணபுரமென கருத்தினிலே யார்ந்த தன்றோ.

---

5. இவ்வாறு பெருமை வாய்ந்தவன் உறைவது, யாவற்றாலும் மேம்பாடுடைய திருக்கண்ணபுரம், எங்கும் "ஓங்கும்" நிலை. திண்மதிள் "கன்னி நன்மா மதிள் புடைசூழ்" திருக்கோயிலின் முன் புஷ்கரிணியின் செவ்வி. விரை-பரிமளம்' பெருமானை "ஸர்வகந்த" என்று போற்றுவர்; புஷ்கரிணியிலும் பரிமளம் அடர்ந்துள்ளது மான் ஓங்கு நோக்கியர் — மானினும் அழகு மிக்கு நோக்குடையவர்கள். பூமங்கை, புவி மங்கை பெரிய பிராட்டியார், பூமிதேவி. மணநோக்கம்— மங்களகரமான நோக்கு. இவன் "ஸர்வ ரஸ" இவனுக் கேற்ற இனபம் சார்வு புகல்.

6. ஊரை வளைக்கும் பொழிலின் வளம். பெருமான் "பூர்ணன்"; இவன் உறையும இத்திருப்பதியும் யாவும் நிறைவுற்றது. மரங்களில் மலர்கள்,மலர்களிலிருந்து தேன பெருக்கு. வண்டுகள், அன்னங்கள இவை கொள்ளும் இனபம். பிரசம்— தேன். பண்கள்' "வண்டினங்கள் காமரங்கள் இசைபாடுங் கணபுரத்தென் கருமணியே" (குலசேகரப்' பெருமாள்). எகினம் —அன்னம். நடு நடுவே — இடையிடையில்.

## 7. கட்டளைக் கலித்துறை

ஆர்தருஞ் சந்தச் சுவையு மணியு மருந்துறையும்
சீர்வளர் சொல்லுஞ் செழிப்ப நிகரிலாச் செந்தமிழால்
ஓர்வள மோங்கக் கலியன் வழங்கிடு மோரமுதம்
ஆர்வில யின்றான் கணபுரக் கோமா னரிதெனவே.

## 8. இருவிகற்ப நேரிசை வெண்பா

கோமான்! அமுதாங் குருகைக்கோன் பாவயிலுஞ்
சீமான! நுகர்ந்தனை நீ சேரலர்கோன் — நாமாண்
பொழிவாற் தமிழும் புதுவைக்கோன பாவாய்
வழியும் மதுவோ டுகநது.

## 9. கட்டளைக கலித்துறை

உகநது கடுவன் பனசக் கனிக ளுகிரதனால
வகிர்நது மதுபாய மந்தி மகவொடும வாரிதனிற்
புகுந்து கதலிக் குலைதோய்த்து மாலோன பொலனடிபால்
மகிழ்நது வகுத்திட வாய்ந்த கணபுர மாநகரே.

---

7. அடியார் பெருமானுக்கு முக்கரணங்களாலுந் தொணடு செய்வர். திருமங்கையாழ்வார் வழங்கிய கவிய முதம். பாக்களில் மலிந்துளளன சந்தம், சுவை, அணி, துறை, சொல். ஆர்வு - விருப்பம், இவர் "கலைபெருமான்" என்று ஆன்றோர் போற்றுவர்.

8. கலியன் அளித்த விருந்தோடு மூவர் அளித்த விருந்தையும் பெருமான நுகர்ந்தான. பா அமிலும் - பாவாகிய அமுதத்தைப் பருகும். சீமான — இப்பாக்களாகிய செல்வம் வாய்ந்தவன. நாமாண் பொழிவு — நாவிலிருந்து மாண்பு அடரப பொழிவது. புதுவைக்கோன் — பெரியாழ்வார். பாவாய் வழியும் மது திருமொழி.

9. இத்தலத்தின் பெருமை. மாநகரம் வாய்ந்த: வாய்ந் தது; வாய்ப்புடையது. விலங்குகளும் பக்தி செய்யும் பெருமை. கடுவன - ஆணைகுரங்கு. பனசம — பலா. உகிர் — நகர். மந்தி - பெண்குரங்கு. மகவு — (குரங்கின) குட்டி. வாரி — மதுவெள்ளம், பொலன அடி — பொன்கழல். வகுத்து இட பிரித்து வழஙக. வாழை கூறியமையால் இனம் பற்றி மாவுங் கொள்க. பொலன் — பொன், அழகு, மேன்மை.

## 10. முப்பத்திருசீ ராசிரிய வண்ண விருத்தம்

புயவகுப்பு

முதலடி

நகரவல சைலநிரை நடுங்கிறிலம் பாயவென
நறுநறெனெ நேமிகொடு சிறைபிணை சிதைத்தன
அடர்ந்துயரு மம்புதியி லருவரையை நட்டுவிட
வரவதனை யகடொடிய நெடுநெடென வசைத்தன
நடுக்கமுற வுந்துபுன லொடுங்கவொரு மச்சவடி
வெடுத்துமற முறித்துமறை நிலத்தெழ வுயர்த்தன
புறக்கடலி லிறுத்தபுவி யெயிற்றினிடை யமைத்துதவி
யுரத்திலுறப் பொருத்தமிக மகிழ்வுற வணைத்தன

---

10. ''கற்பகக்காவன நற்பல தோளற்கு'' என்றவாறு கற்பகப் பணைகள் போன்ற தோள்களின் பெருமையை விவரிபபது. ''கஜம் வா வீக்ஷ்ய ஸிம்ஹம் வா வநமாசீரிதா | நாஹாரயதி ஸந்த்ராஸம் பாஹூ ராமஸ்ய ஸம்சீரிதா ॥ பிராட்டி இராமனது புயங்களைப் பற்றியவளாய், யானை, சிங்கம், புலி எதைக் கண்டாலும் அச்சங்கொள்ளமாட்டாள். இவ்வாறான தோள்களாலும், இவன ஏந்தும் படைகளாலும் நாம் எதற்கும் அஞ்ச வேண்டியதில்லை என்பது இங்குக் கருத்து.

இப்புயங்கள் செய்தன மலைகளின் சிறகுகளை சிதறச் செய்தன; திருப்பாற்கடலில் அமுதம் தோனற, மந்தர மலையை இட்டுக் கடைந்தன; மச்சவடி வேற்றபோது மறை களை மீட்டன; வராகாவதாரத்தில் பூமிப் பிராட்டியை மேலெடுத்து, அணைந்தன.

நகரவல — பறக்கக்கூடிய, சைலம் — மலை. ''பொரு வரைமுன் போர்தொலைத்த பொன்னாழி'' என்றார் திருமங்கையாழ்வார்.

அம்புதி—கடல். நட்டு விட அரவு அதனை, அகடு ஒடிய என்று பிரிக்க. அகடு—வயிறு.

நடுக்கமுற... ஒடுங்க—பெருங்கடலும் ஒடுங்குமாறு பெரிய வடிவு. மறம் முறிதது—தீமை செய்தோரை அழித்து.

இறுத்த—அழுந்திய. எயிறு—தந்தம். உரம்—திருமார்பு.

இரண்டாமடி

நிகரிலுரங் கொண்டநிசி சரர்களிடை வெய்யகணை
நெருக்கிமுனி வேள்விதனை நிரப்பிப் புரந்தன
மிதிலைநகர் மானவர்க ளுள்ளமுற வண்ணவரி
வில்லினொடு புங்கமவை சுமந்துகொ டெளிர்ந்தன
நிமிகுலம துய்யவென நிலமிசையு தித்தவளைப்
புணரவென நெடியதொரு சாபம திறுத்தன
நிசிசரர்தம் முண்டமொடு நிருபவரன முடிகளினம்
மண்டி நிலந் துள்ளவென வில்லது வளைத்தன.

மூன்றாமடி

பகரவரு பத்தியொடு பரிவுமிக வல்லகுகன்
பதம்வலிய வாதமகன பரிதிமக னனதிமிக
வரியதொரு சதவகுண வரக்காவர னெனநிவர்த
மகலமவை புலகிவருஞ் செல்வமது பெற்றன

---

இரண்டாம் அடி: முனிவன் வேள்வி காத்தது, மிதிலையிற் சிலை ஏந்தி மிளிர்ந்தது, பிராட்டியை அணைத்தது, அவளுக்காக அரக்கரை அழித்தது.

உரம்—வலிமை. வெய்ய கணை—கொடிய அம்புகள். வேள்வி நிரப்பி—வேள்வி குறையின்றி நிகழுமாறு காத்து.

உள்ளம் உற—வியக்குமாறு, "தோள்கண்டார் தோளே கண்டார்" என்றவாறு புங்கம் அவை—கணைகள்

நிமிகுலம் அது...உதித்தவளை—படைச்சாலில் எழுந்த சானகிப் பிராட்டியை. நெடியது ஒரு சாபம்—மிகப் பெரிய வில் (சிவபெருமானது வில்).

முண்டமொடு—போரில் இறந்தவர்களது முண்டங்களுடன் நிருபவரன்—இராவணன். மண்டி—அறுக்க அறுக்க மீண்டுந் தோனறிப் பனங்கனிகள் போலச் சிதறி விழுந்து நிலத்தில் நிறைதர.

மூன்றாம் அடி: வரிகள் 1—4 அன்பரைப் புல்கியது, பெருமானுக்கு அருஞ்செல்வம் போன்றது. பரித்ராணாய ஸாதூநாம்

பகரவரு பக்தி—லக்ஷ்மணனிடத்தும் பரதனிடத்தும் குகப் பெருமாள் சங்கைகொண்டது குறிப்பு. பதம் வலிய வாதமகன்: அனுமான இவனது பாதம் மகேந்திர மலையிற் பதிந்தபோது, அது அமுந்தியமை குறிப்பு. பரிதிமகன—சுக்ரீவன். அரக்கர் வரன்—விபீஷணன்.

படருமிடல் வஞ்சமுடை நெஞ்சனவன் கஞ்சனொடு
மல்லடர் மல்லரொடு களபமொடு கருத்தப
உருமருவு தீயவனு மன்னவரும் பொன்றவெனப்
பணைத்தவர்த மாகமவை சிதைவுறச் சிதைத்தன

நாலாமடி

புகரினெழு வாமமுடை பூவையு ருப்பிணியும்
பொனனனைய மங்கையவர் கொங்கைய தணைந்தன
அமுதுபொழி பைம்பொழிலி லொள்ளிலிடை வந்தவிள
வல்லவியர் கீதமெழக குரவையது கோத்தன
புவியிலுறை மானவர்த மின்னலிக நேமியொடு
பணிலமொடு தண்டுபடை யேந்திப் பணைத்தன
எனதுமனம் வந்துபுகு மைந்தனவன் கண்ணபுரக
கண்ணனவன் மஞ்சனைய வணநற் புயங்களே

---

வரிகள் 5—8 பற்றாதார் பட்ட பாடு. "விநாசாயச துஷ்க்ருதாம்" படரும் மிடல் வஞ்சகம்—மேனமேலும் ஓங்கி வலியிறுங் கபடம். மல்லல் அடர்—வலிமை மிகுந்த மல்லர்—முஷ்டிக சாணூரர். களபம்—யானை; குவலயாபீடம்

கஞ்சனது ஆணையால் கண்ணனை முடிக்கவந்தவர்கள். கருத்தப உருமருவு தீயவன்—கழுதை வடிவில் வந்த அசுரன்' அன்னவர்தம் ஆகம்—இவ்வாறு வந்தவர்களது உடல். பணைத்து—வலிமையுற்று.

நாலாம் அடி: பெருமானது பேரன்பு பெற்றவர்கள். புகர், வாமம்—ஒளி, அழகு. பூவை—பெண் பொன் அனைய—பொன்போற் சிறந்தவர், பிராட்டியைப் போன்றவர்கள். வல்லவியர்—ஆய்ச்சியர். ஒள்ளினிடை—நிலவின் ஒளியில்; நிலவின் ஒளி, மங்கையர் முகவொளி, பெருமானின திருமேனியொளி. அமுதுபொழி—மலர்களிலிருந்து பெருகும் தேன் அடர்ந்த.

இன்னல் இக—துன்பம் நீங்குமாறு. "எப்போதுங் கைகழலா நேமியான், நம்மேல் வினைகடிவான்" (கடிவதற்காக) பணிலம்—சங்கு. தண்டு—கதை, படை –வாள் ஏந்திப் பணைத்தன—ஏந்தியதால் செழுமையுற்றன. இந்த ஆயுதங்கள் இவனுக்கு ஆபரணங்கள் போல்வன. மைந்தன—வீரன்; கணவன். மஞ்சு—மேகம். வண நல் புயங்கள் — அழகு வாய்ந்த புயங்கள்.

## 11. இருவிகற்ப நேரிசை வெண்பா

புயங்க வணையாய்! புகர்முகமுன் காப்பான்
கயங்கொள் கரவு கடிந்தாய்—நயங்கொள்
பொழில்வாய் கணபுரப் பொன்னேயா னுய்ய
மொழிவாய் மதியே வகுத்து.

## 12. எண்சீராசிரிய விருத்தம்

மதியாத மதியுடைய மாயனிடை வண்டே!
''மதியாலே யெல்லிபல வாடுமிவ ளேல்லே
கதியாது மிவட்கில்லை பஞ்சணையுங் கல்லாம்
காவூடு பரவுமிளங் காலுமடர் தீயாம்
பதியாக நீமன்னு கண்ணபுர மாலே!
பகலோடு மிரவோடு வாடுமிவள்'' எனநே
மதுபாயு மிம்மலரை யிந்நொடியில் நீத்தென்
மனநிலையை யோதியவன் மனநிலையை யோர்வாய்.

---

11. காப்பதே இயல்பாகவுடைய பெருமான் காத்தது கஜேந்திரனை. ஒரு முதலையால் துன்புற்ற யானையை நீ காத்தாய். வலிமிக்க ஐம்பொறிகளாகிய முதலைகளால் பிடியுண்ட நான் உய்யுமாறு அருள்வாய். மதி—அறிதெனப் பெரியோர் மதிக்கும ஞானம்.

புயங்கம் - பாம்பு, ஆதிசேஷன். புகர்முகம்—யானை. காப்பான—காப்பதற்காக. கரவு—முதலை. கயம கொள்—தடாகத்தைத் தனககு அரணாகக கொணட. நயம்—நனமை, அழகு. பொன்னே—பொனபோல் யாவராலும் விரும்பப் பெறுமவனே!

12. ''மநதவ்ய : நிதித்யாஸிதவ்ய:''என்றவாறு பெருமானை எப்போதும நினைந்துருகுந் தலைவி ஒரு வண்டைத் தூதாக ஏவுகிறாள்.

மதியாத மதி– என நிலையை அறிநதும், ஏற்றது செய்யாத எண ணம். மதியாலே சநதிரனைக கணடு; பிரிவாலே நிலவும் கொடியதாயிற்று. கல—மெலலியலபு தவிர்த்து கடினமாயிற்று. கா ஊடு... கால். சோலையிலே புகுந்து, அணைந்து வெளிவரும் இளங்காற்று அடர் தீ—பரந்துள்ள நெருப்பு

## 13. அறுசீராசிரிய விருத்தம்

### இரங்கல்

நிலையாது மிலைபற்றோ யேதுமிவை
நின்பாலே தவளங் கண்டேன்
உலையாத செக்கரிடை வண்டிசையை
யோர்ந்துமிக வுலைவே கொள்வாய்
அலையாருங் கடல்போலே கண்ணீர்க
ளருவுதியால் தளவே! என்போற்
கலைவாயர் கண்ணபுரத் தார்பாலே
கருத்தடரக் காமுற் றாயோ?

---

வண்டு செய்ய வேண்டியது : என் மனநிலையை அவனிடங் கூறி, அவனது எண்ணத்தை அறிந்து கொண்டு, என்னிடம அதனைக் கூறுவாய்.

13. தூது சென்ற வண்டு மீண்டதில்லை. அருகிலே தனனைப்போல் நிலையில்லாமல், துவளும் முல்லைக் கொடியைக் கண்ட தலைவி, "நீயும் எனபோல் கண்ணனிடம் காமுற்று இங்ஙன வருந்துகிறாயோ?" என்கிறாள்

தலைவி : நிலை இல்லை பற்று இல்லை—பற்றான தலைவன் வரவில்லை. பிரிவால் உடம்பு வெளுத்துள்ளது. தவளம் - வெண்மை. வண் திசையை நோக்குகிறாள். அவன் வரும் திசை, வண் திசை, வண்மை மிக்கது. இந்தத் திசையை நோக்குகிறாள்.

முல்லைக் கொடி : பற்று இல்லை—பற்றிப் படர்வதற்குப் பற்றுக் கொம்பு அருகில் இல்லை. தவளம் கொள்ளும்—மலர்களால் வெண்மை ஏற்கும். வண்டு இசையை நோக்கும்—மலர்களில் படியும வணடுகளின் இசையை நோக்குகிறது. மெலிவும் கொண்டுளளது.

உலையாத - நீங்காத செக்கர்—சூரியன மறையும்போது காணும் சிவபபு நிறம். அலை ஆரும்... அருவுதி : கொடி தேனைப் பெருக்குகிறது. தலைவி கண்ணீர் பெருக்குகிறாள். தலைவியின தேர்வு கலைவலவர் காமுற்றாய்.

கலைவாயர்—"கலை இலங்கு மொழியாளர்" (திருமங்கை மன்னன).

## 14. எண்சீராசிரிய விருத்தம்

தவம்

உறுதவங்க ளினிவேண்டா பெரியீ ரேறு
பொருதவனை யுறுதுணையா வுள்ளங் கொள்வீர்
சருகிலையுந் தண்காலுந் தவிர்ந்து மேலாந்
தண்டுளவுந் தண்காலும் நாடி வாழ்வீர்
சிறுகிழங்கு காய்கனிகள் தேடி யென்றும்
பெருகிழங்கு பெறுங்காயம் பெற்றீர் சேர
வரைமுகடும் வார்புனலும் வேண்டா மாலோன்
கண்ணபுரம் வளரொளியை வாழ்த்த வாரீர்.

---

14. இவ்வாறு பெருமான் நமக்கேயாக இருப்ப, கொடிய தவங்களால் என்ன பயன்? தவங்களால் சுவர்க்கம் பெற்றாலும், இவற்றின் பயன் அற்பமாய், நிலையற்றதாய், மீண்டும் பிறவியே நேரும் ஆதலால் கண்ணபுரத்தில் ஒளிமயமாய் விளங்கும் பெருமானை வாழ்த்த வருவீர்.

ஏறு [பொருதவனை...கொள்வீர்—நப்பின்னைப் பிராட்டியைப் பெற ரிஷபங்களைக் கொன்ற பெருமானைத் துணையாக நாடும் நீங்கள்.

வேண்டாதன : உறுதவங்கள் : உண்பன சருகு இலை—உலர்ந்த இலைகள். தண்கால்—குளிர்ந்த காற்று ;இவை உட்கொள்ள. இத் தவத்தில சிறு கிழங்கு, காய், கனி இவற்றைத் தேடி நீங்கள் பெற்றது: பெருகிழங்கு பெறும் காயம்—பிறவிகளால் எப்போதும் மூப்பே வாய்ந்ததாகப் பெறுகின்ற காயம் (உடல்). பெருகிழங்குக்காகச் சிறுகிழங்கு நாடுவதே! கிழங்கு—மூப்பு.

மேலும் தவஞ்செய்வதற்காக, வரை முகடும் வார் புனலும் வேண்டா. வரை—மலை, முகடு—உச்சி. வார்புனல்—யாறு.

நீர் செய்ய ஏற்றது : தண் துளவும், தண்காலும் நாடுவீர். தண்கால் : ஒரு திருப்பதி. வரை முகடு வேண்டா: கண்ணபுரத்துப் பொன்மலை போல் நின்றானை நாடுவீர்.

## 15. கட்டளைக் கலித்துறை

வாராய் மடநெஞ்சே! வாழ்த்தப் பரமன் மலரடியே
காரார் குழலாள் கமலை யணைந்து களிக்குமிவன்
சீரார் கருடன் சிறகின் நிழலினிச் சேனையர்கோன்
ஏரார் பிரம்பதன் கீழு மறிவா யிவற்கிடமே

---

இறைவனது திருவருளை நாடிச் சிலர் நீர் நிலைகளிலும் மலையுச்சியிலும் தோய்ந்து தவஞ்செய்வர். இறைவனோ நம்மைப் பெறுவதற்குத் திருப்பாற் கடலிலும் திருவேங்கட மலையிலும் உறைந்து தவஞ் செய்கிறான். "வெள்ளத்தி னுள்ளா னும் வேங்கடத்து மேயானும், உள்ளத்தி னுள்ளானென் றோர்." இவனே கண்ணபுரத்தில் வளரும் ஒளி.

15. இப்பெருமானைப் பெறுவதற்கு உபாயம: இவனை வாழ்த்துவது. இவனது பெருமை: இவன் பிராட்டியை அணைந்து, மகிழும் உள்ளம் வாய்ந்தவன கருடனது சிறகின் கீழும், சேனாபதியின பொற்பிரமபின கீழும் இவன் இருப்பது. சீரார் கருடன—வேதமயனாயப் பொன்னின நிறம் வாய்ந்தவனாகையால். ஏர்—எழுச்சி, சிறப்பு. பிரம்பு அதன கீழ்; நிருவாகம அனைத்தும் சேனாபதியான விஷ்வக் ஸேநரைச் சேர்ந்தது, பெருமான இளவரசுபோல் விளங்கு கிறான. வானின் வரசு வைகுந்தக் குட்டன (பெரியாழ்வார்). பிரம்பு : நிருவாகத்திற்கு அறிகுறி.

சீரார் கருடன.. நிழல் : தனது அடியாரகளது விருப்பபடி நடந்து கொளவன இறைவன ''ஓடும் புளளேறி'' (நம்மாழ்வார்) புள் ஏறி ஓடும . இறைவனைச சுமந்து களிப்பது கருடனுக்கு விருப்பமெனில இவன இவனது முதுகிற படிநது சஞ்சரிப்பான்.

யசோதைப் பிராட்டிககு இன்பம் அளிப்பதற்காக இவன இவளது மடியில் வளர்ந்தான் என்பர்.

எனனே இறைவனது நீர்மை! அடியார்களைக் களிக்கச் செய்து இவன் களிப்பான்.



## 16. இருவிகற்ப நேரிசை வெண்பா

### தூது

வாயும் புகர்கொண்டு மின்னும வணமுகிலே!
மாயன கணபுர மாநகரே—போயவன்பால்
தூது பகர்வாயே: "சோரும் வனிதையிவள்
ஏது புகலிவட்கே?" என்று.

## 17. எண்சீராசிரிய விருத்தம்

### இரங்கல

எனறு வருமோ சொல்லாய் தோழீ!
இனியன கணண புரந்தோ யீசன
நினறு கிளருங் காமப் படுதீ
நெய்பெய் யழலாய் நெஞ்சை யகைக்கும்
தெனறல் தழலே, அமுதக் கிரணன
தீயிற் கொடியன பெணையிற் புணரு
மனறிற் குரலுங் கனலே, மாரன
அனலைங் கணையே சொரிவா னேல்லே!

---

16. தலைவனது வரவு தாமதிப்பதால் தலைவி மேகத்தைத் தூதாக அனுப்புகிறாள். வனிதை இவள்—இப்பெண். சோருமு—செய்வதறியாமல் லாடுகிறாள மினனும் வணமுகில்காள்: மினனலோடு மேகத்தைக் காணும போது, பிராட்டியோடு பெருமானின சேர்த்தியை நினைப்பது இயல்பு.

17. தலைவி தோழியிடம் தனது நிலைமையைக் கூறுகிறாள். இயம்புவை—சொல்லுவாய். துன்பம விளைப்பன: காமத்தீ, தென்றல், நிலா, அன்றிலின் குரல். படுதீ—கொடுமையான தீ. நெஞ்சை அகைக்கும் உடலிலே யனறி உள்ளும் புகுந்து வாட்டும். அமுதக் கிரணன—சநதிரன், யாவரும் விரும்புமாறு கிரணங்கள் வாய்ந்த சந்திரனும். பெணையில் -பனையில். புணரும்: ஆணும் பெண்ணும் கூடும்போது களிப்பில் கூவும் குரலும் எனனைத் துனபுறுத்தும். கனல்—நெருப்பு. இத் துன்பங்கள் விளைவிப்பவன் மாரன், காமன், உடலில்லாத ஒருவன செய்யும் கொடுமைதானென்? அனல் ஐங்கணைகள்—அனல் போல் எரிக்கும் ஐந்து மலர்க்கணைகள். "கொன்னவிலும் பூங்கணைகள்" என்பது ஒப்புநோக்கு.

## 18. எண்சீராசிரிய விருத்தம்

தாயிரங்கல்

எல்லிடையோ ரிளங்காவிற் குரவை கோத்தீர்
என்னிளமா னுளங்காய வரவை நீத்தீர்;
வல்லவர்தம் மஞ்சனிக்கேம் விடையை யட்டீர்
வல்லியிவள் நெஞ்சழிய நடையை விட்டீர்;
மெல்லியடையாள் சீதைக்கே விலங்கை வைத்தீர்;
மெல்லியலிக் கோதைமீக் கலங்க வைத்தீர்;
வல்விடையோ னிடரொழித்த மிடலே றேநீர்
வனமுலையா ளிவள்பிழைக்கக் கடிதே வாரீர்.

## 19. எழுசீராசிரிய விருத்தம்

தலத்தின் மேன்மை

கடியாருங் காவோங்க நடுவோங்குஞ் சீர்க்கண்ண
புரமாகும் கானவாரி நிலனோடு
புடைபாயு மாறோடுதடமோடு மலையோடு
பொனனோங்கு முறைவோடு பொலனோங்கப்

18. தலைவியின் நிலையைக் கண்டு, தாய் பெருமானிடங் கூறுவது : பெண்பாலருக்கு அருள் செய்யும் நீ என் பெணணிடம் வேறறுமை கொள்வது வியப்பே

எல்—இரவு. என இளமான்—எனனுடைய அழகிய பெண். வரவை நீத்தீர்—வரவிலலை. வல்லவர்—இடையர். மஞ்சனி—பெண்; நபபின்னைப் பிராட்டி. விடை—ரிஷபங்கள். அட்டீர்—கொனறீர். வல்லி இவள்—இந்தப் பெண் நடையை விட்டீர்—நாடி இங்கு வரவில்லை. வில் அம் கை வைத்தீர்—இவளை மீட்க அழகிய கையில் வில் ஏந்திப் போர்செய்தீர். என கோதை மீ (மிக) கலஙக வைத்தீர்—இவள் மிகவுங் கலங்குபடிம் இவனைத் தனியாக வைத்தீர் வல் விடையோன்—ரிஷபத்தை வாகனமாக வுடைய பரமசிவன. இடர் - துனபம்; கையிற் கபாலம் கொண்டதால். ஏறே! நீர். ஏறு—ஆண் சிங்கம். கடிது—விரைந்து.

19, தாய் இரங்குவதைக் கேட்ட பெருமான, இவளது அலமாப்பு நீங்குவதற்காகச செய்தது: அருள் புரிவதே இயல்பாகவுடைய தான, திருக்கணணபுரத்தில் இதற்காகவே உறைவதைக் காட்டினான். கண்ணபுரம் ஆகும்... சீர் ஏறு புரம் என்று இயைக்க.

கடி - பரிமளம், கா—சோலை. ஏழு புண்ணியங்கள். கான (க்ருஷ்ணாரண்யம்), வாரி (கீழ்க் கடல்), நிலம்—(க்ருஷ்ண க்ஷேத்ரம்).

படியோது மாறன்ற னமிழ்தேரங்கு பாவோடு
பரகால னமுதோடு குயிலீந்த
தொடையூறு தேனோடு தொண்டர்த மமுதூறு
துதிகூடுஞ் சீரேறு புரமாமே.

## 20. நேரிசை வெண்பா

தூது

ஆமோ மதுகரமே! ஆவித் தினிதிருந்தாய்
சாமம் நெடிதோங்கும் சௌரீசர் – வாம
மணியி னுருவென மனமுருக்குந் தீயாம்
பணியா யினித்தரியா னெனறு.

ஆறு (காவிரி), தடம் (புஷ்கரிணி), மலை (கருடபர்வதம்), விமானம் (உத்பலாவதகம்); உறைவு. பொலன – அழகு. பொலன் ஓங்க – இவற்றாலே அழகு மிக்குள்ளது. இது வரையில் தலத்தின வளம்.

இனி ஆழவார்களது அருளிச செயல்களால் பெருமை. படி ஒது - பூமியிலுள்ளவர்கள் பாராட்டுகினற படி – தரம்.படி ஒது – யாவரும் தரத்தைப் பாராட்டுகினற (பாடல்களின). அமிழ்து –, அமுது. பரகாலன அமுது – திருமஙகையாழவாரின் பாசுரங்கள், அமுதம் போல இனிபபன. "இனபப பாடல்" குயில் – ஆண்டாள். தொடை ஊறு தேன் – பாசுரங்களின தொடையில் ஊறுகினற தேன (சுவை), தொண்டர் .. துதி – அடியார் ஒதும் துதி, அமுதம் போல்வது. கலைவலவர் என்று பாராட்டப் பெறும் தொண்டர்.

20. பெருமானை நினைத்துத் தலைவி நெஞ்சுருகும் நிலை : இதைத் தலைவனிடம் கூறுமாறு ஒரு வண்டைத் தூது விடுகிறாள், இவள.

மதுகரம் வண்டு. ஆமோ! - இது உனக்குத் தகுமோ? ஆவித்து - மதுவைப் பருகி ஆரவாரஞ் செய்து. என் நிலையைக் கண்ணாற் கணடும், நீ இவவாறு செய்வதோ? மதுகரம்: மது எப்போதும் வாயில் நிறைநதிருப்பதாற் களிப்பு. சாமம் நெடிது ஓங்கும் – ஒவ்வொரு சாமப் போதும் ஊழியினும் மிக்கு வள ரும். வாம மணியின் உரு – அழகிய மணி போன்ற அவனது உருவம். தீ – இத்தீ மனத்தையும உருககும். மனத்தைக் களிக்கச் செய்யும் இவ்வுரு, மனத்தை உருக்குவதே! பணியாய் – அவனிடங் கூறுவாய்.

## 21. கட்டளைக் கலித்துறை

*தரியா நிலையில் தருணி யழைக்கக் தவறிழைத்தார்*
*பெரிதே வெருவத் துகிலே பெருக்கிற்றுன் பேரதுவே*
*அரியா யரிவீய்த்த கண்ண புரத்தா யகன்மணியே!*
*உரியே னுனுக்கே யடியே னடைந்தே னுனதருளே.*

## 22. கலித்தாழிசை

அம்மானை

*ஏனத் திருவுருவ னெம்பெருமான் சௌரீசன்*
*கூனற் பிறைமருப்பிற் கொம்புயர்த்தா னம்மானை*
*கூனற் பிறைமருப்பிற் கொம்புயர்த்தா னாமாகில்*
*தானற்கொம் பொன்றுரத்துத் தாங்கியதே னம்மானை?*
*ஆனற்கொம் பிடைமுனகூத் தாடினன்கா ணம்மானை*

---

21. திருநாமத்தின் பெருமை: இது திரௌபதியை காத்தது. தருணி – பெண்; திரௌபதி. வெருவ - அஞ்சுமாறு துகில்—உடை. அரி—சிங்கம், பகைவன. அகன்மணி உயர்ந், மணி முத்து.

திருநாமத்தின் சீர்மை உணர்ந்து நான செய்வது உரியேன... உறுதுணையா அடியேன் உனக்கே உரியேன உனது அருளே உறுதுணையா அடைந்தேன. திருமந்த்ரத்தில் அடியேன்: மகாரம், உனக்கே உரியேன்: உகாரம்; நம என்பதன் கருத்து.

22. திருநாமம் செய்யும் வகையால் விருப்பம் ஒரு புடையிருப்ப, இவனைப் பற்றி அறிவது: இவன பெண் என்றால் பித்துடையவன. ஏனமாய்ப் பூமிப் பிராட்டியை அணைத்தான் பெரிய பிராட்டியையும் நபபினைப் பிராட்டியையுப அணைத்தான.

அம்மானை ஆடும் பெண்களுள் ஒருத்தி வராகாவதாரத்தைப் பாடும்போது ஒருத்தி வினவுவதும், வேறொருததி உத்தரம் கூறுவதும்.

ஏனத்திருவுருவன் : "கோலவராக மொன்றாய்." கூன் நல் பிறை மருப்பில்—வளைந்து, பிறைபோல் அழகுடைய வெளுத்த தந்தத்தில். கொம்பு—கொம்புபோல் இடைவாய்ந்த பூமிப் பிராட்டி. உயர்த்தான – ஏற்று அணைத்தான்

இரண்டாவது பெண் : இவன் வேறொரு கொம்பை மார்பில் ஏற்றதேன்? நல் கொம்பு ஒன்று, தன் உரத்துத் தாங்கியது

## 22. பதினான்கு சீராசிரிய விருத்தம்

மானதன் சௌரி வதியுநற் புரமே
வான்தனிப் பதியினும் வரமே;
வரிசிலை வளைத்து மாய்த்தது மானே,
வனந்தனில் மேய்த்தது மானே;
வானது பொழிய உயர்த்தது கிரியே,
வலந்தனி லுயர்த்தது கிரியே;
மடுத்தது வாயில் முன்னைநல் வளையே,
வேட்டதும் பின்னைநல் வளையே,

---

ஏன்? —பெரிய பிராட்டியாரைத் தன மார்பில் அணைத்தது ஏன்?

இதற்கு விடை : நீ அறியாயோ இவன படி! பெண் எனறால் இவனுக்குக் கூத்தன்றோ இயல்பு!

ஆன நல் கொமபிடை முன கூத்து ஆடினான்—கொழுத்த ஏழு ரிஷபஙகளிடையே முன்பு கூத்தாடினான, நப்பின்னைப் பிராட்டியைப் பெறுதற்கு பின்னும நங்கையர் முன குரவைக் கூத்தாடினான். ஆதலால் பெண்பாலரை நினைக்கும் போதெல்லாம் கூத்து. கொம்பு—மரக்கிளை; அடியார்க்கு இவன் காட்டும பிரேமத்தால, பற்றுக் கொம்பாவான். மருப்பிலே கொம்பு உயர்த்து, ''அஹம ஸமராமி மத்பக்தம்'' எனறு சரமசலோகத்தை ஓதினான எனபது குறிப்பு

23 இவன பல பிறவிகள் பிறந்து, பெருமை கொண்ட வகை. மானதன—பெருமை வாயந்தவன : ''பிறப்பில பல் பிறவிப் பெருமான.' வதியும்—உறைகின்ற வான தனிப் பதி—ஸ்ரீ வைகுண்டம். வரம—சிறந்தது.

வரி சிலை வளைத்து மாயத்தது மான . மாரீசனாகிய பொய மானை. வனம் தனில மேயத்ததும் ஆன : பசுக்கள்.

வான அது பொழிய—கல் மழை பெய்ய, உயர்த்தது கிரியே—ஏந்தியது கோவர்த்தன மலை கிரி - மலை. வலமதனில்—வலககரத்தில. உயர்த்த—உயர்த்தது. திகிரி—சக்கரம்

முன்னை வாயில மடுத்தது நல் வளை—முனபு பாரதப் போரில் வாயில் வைத்து ஊதியது சஙகு; வளை சங்கு. அன்றி ருக்குமணிப் பிராட்டிக்குத் தனது வரவைத் தெரிவிக்க ஊதியது சங்கு. வேட்டது விரும்பியது பின்னை நல்வளை—நல் வளை பின்னை; சிறந்த வளைகள் அணிந்த நப்பின்னைப் பிராட்டி.

மீனது மாய வூர்ந்தது புள்ளே,
தமரது சார்ந்தன புள்ளே;
ஒலித்தது வேயிருங் குழலினை முன்னம்,
விரையிருங் குழலினர் துன்ன;
மானமர் நோக்கி யமுதுரந் தோய
மலைந்தது மதுவெழத் தோயம்;
வளர்ந்தது மாறன வண்டமிழ் வளமே,
வளர்ந்ததுங் கொண்டனல் வளமே.

## 24. கட்டளைக் கலித்துறை

நல்லா ளிடைச்சி மடியும் நயப்புல்லும் நஞ்சரவும்
கல்லோல மேலா லிலையுங் கருதினை கண்வளரப்
பொல்லா வினையேன் வினைபோகப் புந்தி புகுந்தனையால்
மல்லார் புயத்தாய்! கணபுரம் வந்துறை மாமுகிலே!

---

மீன—முதலை. மீன என்றது, பெருமானது புயவலிக்குமுன் முதலையின சிறுமை தோனற. மீன் மாய, ஊர்ந்தது புள் (கருடன). தமரது அனபு உள்ளே சார்நதது—அடியர்களது அன்பு சேர்வது இவனது உள்ளத்தில்; இந்த அன்பால் இவனது உள்ளம் களிக்கும்

ஒலித்தது...துன்ன—பரிமளம் மிக்க கூந்தல் வாய்ந்த பெண்கள் அடர்ந்து கூடுவதற்காக. இவன ஒலித்தது வேய் இருங் குழல்- சிறப்புடைய புல்லாங்குழல். விரை இரும் குழலினர்—பரிமளம் மிக்க நீண்ட குழல் வாய்ந்த நங்கையர்.

மானமர் ..தோயம்—பிராட்டியை மார்பில் ஏற்பதற்காகக் கடைந்தது திருப்பாற்கடல் மான அமர் நோக்கி அமுது—மான் போல் நோக்குடையவளாய்ப் பெறற்கரிய அமுதம் போன்ற பிராட்டி. தோய—உறையுமாறு. தோயம்—நீர் (பாற்கடல்.)

வளர்ந்தது . வளமே—பெருமான் முன்னுருச் சொல்ல நம்மாழ்வார் பின்னுருவாகத் திருவாய்மொழியை ஓதி வெளியிட்டார். கொண்டல் நல் வளம்—யாவருக்கும் நன்மை அளிக்கும் தில்யப்பந்தம்.

24. வேண்டுவோர் வேண்டுவன பெறுதற்காகவே இப்பெருமாள் திருக்கண்ணபுரத்தில் உறைகின்றான். என் நெஞ்சிலும் புகுந்து என் தீவினையைப் போக்குவான், இவன். நல்லாள் இடைச்சி—யசோதை;

## 25. பதினான்கு சீராசிரிய விருத்தம்

மறம்

மாவி லேறி வந்த தூத!
மறவர் மானை மாநில
மன்ன னேற்க வேண்டி நின்னை
ஏவ நீயும் வந்தனை;
பாவை நாடி வந்த வுனக
ரம்பி டித்த சீமுகம்
பாறு கொள்ள வல்ல தென்று
காண நீயும் வல்லையே!
கோவி னாணை யெனறு சொல்ல
வல்லை யெனிற் கூறுவன்
கூறு கொண்ட பின்னை லிஞ்சிக்
குலைந்த முண்டங் கூறவோ?

---

நயப்புல்—தூயதான தர்ப்பைப் புல்; இவனது திருமேனியல் நயம் பெற்ற புல். நஞ்சரவு—திருவானந்தாழ்வான் கல்லோலம்—அலை ஆல்—ஆலிலை; பிரளய காலத்தில் இதன்மேன் துயின்றான். புந்தி—மனம் முகிலே—மேகம்போல் தரம் பாராது அருள்செய்யும் பெருமானே!

25. இறைவனிடத்து பக்தி கொண்ட நங்கை ஒருத்தியை மணம்பேச அரசன தனது தூதனை அனுப்ப, அவளது தந்தை தூதனைக் கடிந்து கூறியது.

மாவில் தூத! அரசனது தூதனாக வந்ததால் இறு மாப்புடையவனே! மறவர் மான்—மறவர்தம் பெண். நீயும்—அரசனே யின்றி நீயும் அறிவு கெட்டாய். பாவை—என் பெண்' பாவைபோல் அழகுள்ளவள். நீ கொண்டு வந்தது சீமுகம் (ஸ்ரீ முகம்) அனறு; சீமுகம் உடலிலிருந்து நீக்கப் பெற்றதால் சீழ் அடர்ந்த தலை. சீமுகம் (ஸ்ரீமுகம்) ஓலை, கடிதம்; மன்னன் அனுப்பியதால் மேனமை குறித்து.

இந்தச் சீமுகத்தின் நிலை: நான் கொள்ளவன்று. பாறு கொள்வது: பாறு—கழுகு.

இது அரசனது ஆணை என்பாய். நான் கூறும் மறுப்பைக் கேட்பாய். சீமுகம் (உடலிலிருந்து பிரிந்தது) கூறவல்லதோ? குலைந்த—உடலிலிருந்து பிரிந்த. கூறுமோ?—அது வேறுந்தரையிலன்றோ கிடப்பது! பேசவல்லதோ?

வீவி லாத காதல் கொள்ளு
மெங்கள் மங்கை மெய்யிதே
வெய்ய வாளுந தண்டு மேந்து
சௌரி மனனன் தாளிலே

## 26. பதினான்கு சீராசிரிய விருத்தம்

மறம

தாளினை நீட்டிச் சகடிறக காய்ந்த
தனிப்பெரு நாயகன செவ்வித்
தாளிணை நாடும் மறவர்தஞ் செல்வி
யிவளென வோர்ந்திலை யந்தோ!
வாளினை யேந்தி மணந்தனைப் பேச
வநதவ குறுபிண மாகி
வாயது வோய நின்றது கேட்டி
புனைசுருட டோலையை மனனன்

எங்கள் பெண காதல் செய்வது சௌரிப் பெருமானை.

26 தந்தையின சொல்லாற் சினங் கொண்டு, தூதன் தனது வாளை நோக்க, தந்தை மீணடுங் கடிந்து கூறியது.

இவள் எங்கள் பெண் எனபது நீ உணரவில்லை. நாங்கள் பெருமானிடத்தே பற்றுடையோம் நீ தாளிணை ..காய்ந்த—சின்னஞ் சிறு மகவாய்ச் சகடாசுரனைத் தனது தாளாலே மாய்த்த. பால் வரவு தாழ்த்ததால சினங்கொள்வான்போல் கண்ணன தனது தாளை நீட்டச் சகட வடிவில் வந்த அசுரன் மாய்ந்தான்; சகடத்தின ஆரங்கள சிதைந்தன. மறவர் தம் செல்வி—மறவர்களாகிய எங்களுககு இவள் செல்வம்.

உனனைப் போலே வாளை ஏந்தி வந்தவர்களது கதி நீ உணராய்போலும! அவர்கள் உறு பிணம் ஆகி நின்றனர். எங்கள் முன அவர்கள் பேசவும் இயலவில்லை.

வாய் அது ஒய—பேச இயலாமல். கேட்டி—கேட்பாய். நீ செய்யத் தக்கது: அரசனது ஓலையை அவனிடத்தே சேர்ப்பாய். அவனது ஆணையை அறிவிக்கும் ஓலை இங்குப் பயன்பெறாது. ஓலை—ஆணை எழுதிய பனை ஓலை. இது புனை சுருட்டு ஓலை—புனைந்து சுருட்டப் பெற்ற ஓலை. புனை சுருட்டு—பொய்; சதியாலோசனை.

நீளிணை காதிற் றிணித்திடு நீயே
இளம்பிடி வேண்டுதி யாகில்
நீயடை கானே காரிகை வேண்டிற்
பாவலர் தம்முழி யேற்பாய்
மீளுதி யாகி லணங்கெனக் கூறிக்
கொலைவினை யாளரை மேவாய்
மீண்டினிப் பாவை வேண்டுதி யென்னில்
மரத்திலும் மண்ணிலுங் காணே.

## 27. கட்டளைக் கலிப்பா

மடககு

மணணில் தோய்ந்தது பன்னக மலையே
மாந்த துங்கரும பனனக மலையே,
நண்ணி யுறைவது மத்தி கிரியே
நாடி யுயர்ப்பது மத்தி கிரியே,

---

நீள் இணை காதில் திணித்திடு—பனை ஓலைச் சுருள் காதுக்கு ஏற்றது: நீள் காது: மனனன நெடுருசெழியனோ? ஏழை மாதர் ஓலைச் சுருளைக் காதில் அணிவர்.

தூதன நாடி வந்து, இளம் பிடி வேண்டும் எனறான. இளம் பெண் எனறான. இளம பிடி—இளமை வாய்ந்த பெண் யானை; இது காட்டிலே காண்பதாம். ஆதலால் நீ கான அடை.

காரிகை (அழகிய பெண) வேணடும எனறான தூதன். காரிகை யாப்பருங்கலக காரிகை —இது புலவரிடம பெறலாம்.

அணங்கு (அழகிய பெண) எனறான தூதன. அணங்கு கொலை; இது செய்லது கொலைவினையாளர்.

பாவை வேண்டும எனில, மரத்திலும் மண்ணிலும் பாவை பெறலாம். பாவை—பதுமை, அழகிய உருவம்.

27. நம்மைக் காப்பதற்கெனவே பெருமான் பல திவ்ய தேசங்களில் உறைக்கின்றான. இவனைத் திருககண்ணபுரத்தில் நாடி நாம உயயலாகும்.

பனனக மலை: பனனகம—பாம்பு, ஆதலால் சேஷசைலம், திருவேஙகட மலை. இவன மாந்தது—அனுபவிப்பது. கரும்பு அன்ன கமலை (லக்ஷ்மி.)

பண்ணிற் பெற்றதும் மாறனற் பாவையே
மார்வி லுற்றதும் பாறனற் பாவையே,
கண்ண புரத்தவ னூர்திபொன் னாகனே
களித்து றைவதும் பைகொ ணாகமே.

## 28. எழுசீராசிரிய விருத்தம்

நாகமது நீத்துமுன மோங்குமலை யாழிவிட
நாகமது நாடியுறை நம்பீகேள்
நாகமது பேர்த்துமழை காத்துவிரை வேதமய
னாகமது சார்ந்துமலர் கைக்கொண்ட

பின்னும் உறையுந தலம் : அத்திகரி (காஞ்சியில்). நாடி உயர்ப்பதும்—உயிர்களைக் காப்பதற்காக விரும்பித் திருக்கையில் ஏற்பது. அ திகிரி—அவ்வாறு சிறந்த திருச்சக்கரம்; "பொருவரை முன் போர்தொலைத்த பொன்னாழி."

அனுபவிப்பது . பண்மயமான திருவாய்மொழி : மாறன் நற்பா—நம்மாழ்வார் அருளியதாய், வேதப்பொருள் அடர்ந்த திருவாய்மொழிப்பா. மார்வில் உற்றது : பிரியாமல் உறைவது. பால் தன் நல்பாவை: திருபாற்கடலினின்றும் வெளிவந்த பெரிய பிராட்டியார், பாவைபோன்று அழகியவள். நல்பாவை : உயிர்களுக்குப் புருஷகாரமாக இருப்பவள்.

இவனது ஊர்தி கருடன்; இவன் பள்ளிகொள்ளும் அணை ஆதி சேஷன. பொன் ஆகன் பொன்மயமான திருமேனியுடைய கருடன். பைகொள் நாகம்—படங்கள் வாய்ந்த ஆதிசேஷன் பைகொணாகம்—பை கொள் நாகம்.

28. பெருமானைப் பார்த்து, "நீ செய்வன யாவும் உள்ளத்திற்கு இனிப்பன" எனபது "ஏஷ நாராயணங் ச்ரீமாந் க்ஷீரார்ணவ நிகேதந:நாக பர்யங்க முத்ஸ்ருஜ்ய ஹஸ்யாகதோ மதுராம் புரீம்" என்றவாறு ஸ்ரீவைகுண்டத்திலிருந்து திருப்பாற் கடலில் தோய்ந்து, இங்கு வந்தவன இறைவன்.

நாகம்—ஸ்ரீவைகுண்டம் ஓங்கும் அலை ஆழி—திருப்பாற் கடல் இதில் நாகம் அது நாடி: நாகம்—ஆதிசேஷன். அதில் அறிதுயில் கொண்டாய்.

நாகமது காத்துமடு நாடிநலி யைந்தலைய
நாகமது நைத்தவுன தொண்கழலில்
நாகமது பூத்தமலர் தூவுதனி யனபேமுன்
னாகமத னுள்ளமுறப் போந்தேனே

## 29. இருவிகற்ப நேரிசை வெண்பா

போந்தேன் புவியிற் கணபுரப் போதகமே!
காய்ந்தேன் கொடுநரகிற் கள்ளமினி—மாய்ந்தொழிய
மெய்வாய்கண் மூக்கு செவியால்நான் மேம்படவே
உய்வாய செய்வா யுகந்து

## 30. அறுசீராசிரிய விருத்தம்

உகந்தடையின் சௌரீச னொண்கமலக்
கழலிணையே யுந்தம் வாழ்வில்

---

நீ செய்தது : நாகம் அது பேர்த்து : கோவர்த்தன மலையை ஏந்தி. நாகம்—மலை மழை காத்து—மழையால் துன்பமுறாமல் உயிர்களைக் காத்து.

விரை வேதமயன் ஆகம் அது சார்ந்து—விரையும் இயல் புடையவனாய், வேத மயனான கருடனமேல் தோய்ந்து. நாகம் அது காத்து; நாகம்—யானை கஜேந்திரனைக் காத்து

மேலுஞ் செய்தது : மடு நாடி—காளியன் வாழ்ந்த மடுவிற் சென்று நலி ஐந்தலைய நாகம் நைத்த—துன்பமே செய்து வந்த காளியனது கொழுப்பை அடக்கிய. நைத்த—நையச் செய்த உனது ஒண் கழலில்—நாகம் அது பூத்த மலர் தூவு(ம்)—புன்னை மலர்களைத் தூவுகினற; உபலக்ஷணம், பொது வாக மலர்களைத் தூவும். முன்—முதலில். தூவு தனி அன்பே ஆகம் அதன் உள்ளம் உற - என நெஞ்சின உள்ளம் களிக்க. நெஞ்சும் களிப்பதற்காக ஓர் உள்ளம் கொண்டது போலும்! நெஞ்சுக்கும் நெஞ்சு!

29. என்னைக் காக்க நீ வந்தாய். எனது ஐம்பொறிகள் நல்வழிச் செல்லுமாறு நீயே அருள் செய்யவேண்டும். போதகம்—யானை. "குணபால மதயானை" என்பர் திருமங்கை யாழ்வார் கொடு நரகில் காய்ந்தேன்; இனி கள்ளம் மாய்ந்து ஒழிய—உய்வு ஆவ செய்வாய்—உய்வதற்காவன செய்வாய். கொடு நரகு—உலக வாழ்க்கை.

30. பெருமானது திருவடிகளை இப்போதே பற்றித் திருநாமங்கள் ஆயிரத்தையும் ஓதவேண்டும்.

புகுந்தடையுங் காய்கூற்றந் தனுவோடு
புன்பாசஞ் சரமுங் கொண்டு
மிகுந்தடையா மையோடு பித்தமுடன்
மிடல்வாதம் நலியா வண்ணம்
இகந்துடைத்து மேலளிக்கு மெம்மானறன
திருநாமங் கூறு மின்றே.

## 31. கட்டளைக் கலிப்பா

இன்று சென்றடை வோமவன் சேர்புரம்
ஈடில் சேவடி மேற்சிரந் தாழ்த்துவம்
ஒன்றி நங்கரஞ் சென்னியிற் கூப்புவம்
ஓவா தேயவன் பேர்களை யோதுவம்

---

உம்தம் வாழ்வில் காய் கூற்றம் வந்து அடையும்—நீங்கள் களித்து வாழும்போதேகொடிய யமன வந்து சேர்வன். ''சென்றன சென்றன வாழ்நாள், செருக்குடன—வந்தது வந்தது கூற்று'' (நாலடி). காய கூற்றம்—பாவங்கள் ஒன்றையும் விடாமற் குறித்துக் கொண்டு சீறி வரும் யமன.

இவன ஏற்று வருவன : தனு—வில், பாசம்—பாசக் கயிறு, சரம்—அம்பு

நாம துன்புறும் வகை : தனு ஒடு புன்பாசம், சரம் கொண்டு ஐ, பித்தம, வாதம நலிவன. தனு—உடல். தனு ஒடு—உடலில் பரவியுள்ள. உடலால் பெறும பாசம்—உலக வாழ்க்கை யில் ஆதரம் சரம்—மூச்சு. இவற்றோடு மிகும் தடை ஆம்—மூச்சுக்குத் தடையான. ஐ—கபம். உயிர் நீங்கும் போது இறைவனை நினைப்பதற்கு இவை பெரிய தடையாவன.

பெருமான செயவது : அஹம ஸமராமி மந்பக்தம் (என் பக்தனை நான நினைக்கிறேன) எனபது. இகம் துடைத்து — இம்மைப் பிறவியை மாய்த்து. மேல அளிக்கும்—மேலுலகம் தருவான்; ''மரணமானால் வைகுந்தங் கொடுக்கும் பிரான்'' (நம்மாழ்வார்). இகநது உடைத்து என்றும் பிரிக்கலாம்; எதிர்த்துத் தகர்த்து.

31. நமது தீவினை நீங்க நாம் செய்வது: அவன் சேர்புரம் சென்று அடைவோம, அவன சேவடிமேல சிரம் தாழ்த்துவோம்; ''பாத(ம்) நாளும பணியத் தணியும பிணி''. ஒன்றி ஊக்றி யிருந்து. கரம் சென்னியில கூப்புவோம்; அவன் பேரகளை ஓதுவோம்.

என்று மேயவர் சீரடி யேத்துந
நீட்ட மேமிக நாடுவம் மேலவர்
ஒன் று சீரினை யோதுவம் பாரினி
லொன்று மோயினித் தீவினைத் தூறதே?

## 32. கட்டளைக் கலித்துறை

தீயினை முன்ன மயின்றனை, செவ்வித் திருவதரம்
பேயி னுரத்துற நஞ்சு சுவைத்தனை, பெய்வளையாள்
தாயின் முலையொடு மண்ணு முகந்தனை, தாரணியில்
பாய பரிவிற் கணபுரம் போந்த பரஞ்சுடரே!

## 33. பன்னிருசீராசிரிய விருத்தம்

இரங்கல்

சுடரி லங்கு பரிதிகை கொடுவி லங்கல் பொருதவன்
சுடரி லங்கு கழுவிலே தடவு சிந்தை யுழலவோ

---

என்றுமே அவன் நாடுவம் அவனது திருவடிகளை ஏத்தும் அடியார்களது கூட்டத்தை எப்போதும் நாடிச் சேருவோம். மேலவர் - சிறந்த இவர்களது. ஒன்று சீரினை இவர்எது சிறப்பை. ஓதுவம், பாரினில் ஓதுவம—பாரினர் அறியுமாறு. தீவினை தூறு—கொடிய வினையாகிய புதர். ஒன்றுமோ— நம்மிடம் பொருந்துமோ? அழியும் எனபது குறிப்பு.

32. கண்ணபிரானாய் அவதரித்து இவன செய்த மாயங்கள் பல. இவற்றால இவன சுடர்மிகுத் திருக்கண்ணபுரத்தில் விளங்குகிறான்

தீ - காட்டுத் தீ. பிருந்தாவனத்தில் சிறுவர் மாடு மேய்க்கும் போது எழுந்த தீ. அயினறனை —விழுங்கினாய். திருவதரம்— வாய். உரம்—மார்பு, உற—பொருந்துமாறு. மணணும் உகந்தனை: மண்ணை உண்டு உன தாய்க்கு உன் பெருமை யைக் காட்டினாய். 'வைய மேழுங் கண்டான பிள்ளை வாயுளே." பாய—பரவிய, மிகுந்த. மிகுந்த பரிவு: "மண்ணவர் எல்லாம் வணங்க" - வணங்கி உய்ய

33. சௌரிப் பெருமானையே நினைந்துருகுந் தலைவீ வருந்தும் வகையை விவரிப்பது.

கடலெ முந்த வெண்டிரை யணைந்தெ முந்த கொண்டலும்
கடலெ முந்த திங்களுங் கடிய வாவ வெங்ஙனம்?
மடலெ முந்த பனையிலே வைகு மன்றில் தொனியுமே
மடல்வி ரிந்த கேதகை மணங்க வர்ந்த வாதமோ
அடல்நி றைந்த வாளினுங் கொடிதி யானும் மீளவோ?
அண்ணல் கண்ண புரமுறை கண்ணர் நண்ணி வருவரோ?

---

சுடரிலங்கு....உழலவோ? திருக்கையிற் சக்கரம் ஏந்தும் பெருமானை நினைத்து நான் வருந்தவோ? பரிதி—சக்கரம். பரிதி கை கொடு விலங்கல் பொருதவன்—சக்கரத்தை ஏந்தி மலைகளின் சிறகைத் துணித்தவன். இவன கழலிலே தடவு சிந்தை—திருவடிகளையே நினைக்கும் மனம். உபேந்திரனாய் அவதரித்துப் பெருமான் மலைகளின் சிறகை அறுத்தான் என்ப. விலங்கல்—மலை.

கடலை அணைந்து நீர் முகந்து எழுகின்ற மேகமும் சந்திரனும் எனக்குத் துன்பம் விளைவிப்பன. குளிர்ந்த நீரினின்றும் எழுந்த இவை எவ்வாறு வெம்மை ஏற்றன? தெண் திரை—தெள்ளிய நீரின அலை. இவை கடிய ஆவ எங்ஙனம்? கடிய—கடுமையானவை

அன்றிலின் இனிய குரலும், தாழையின் மணத்தை முகந்து வரும் இளங் காற்றும் வாளினுங் கொடிய வாயின. மடல் எழுந்த—மடல்கள் அடர்ந்த. வைகும்—பொருந்தியுள்ள. அன்றில்—ஆணும் பெண்ணுமாகிய இணை; கலந்து களிப்பால் கூவுவன இவை. கேதகை—தாழை. மணம் கவர்ந்த வாதம்—மணமே அடர்ந்த காற்று; இனிமையே தரக்கூடியது.

வாளினும் கொடிது: வாள் உடலிலே பாயும்; இவை மனத்துளே பாய்ந்து வருத்துகின்றன. உயிரை வைத்துக் கொல்லுகின்றன.

கொடிது யானும்: குற்றியலுகரம்.

இவ்வாறு நன்மையே செய்யவல்ல யாவும் என்னை வருத்த, நானும் மீளவோ? என் துயரைப் போக்க, அண்ணல் வருவரோ? அண்ணல்—பெரியவர்; இகழ்ச்சிக் குறிப்பினது. வருவரோ—என் நிலையை அறிந்து.

## 34. பதினான்கு சீராசிரிய விருத்தம்

வருபுனற் கடலேழும் பொழிலேழும் மலையேழும்
நீயுண்ணு மசன மாகும்
வாழிடமோ வீயாத களிமல்கு வானாகும்
ஆசனமு மரவே யாகும்
மருவுநன் மங்கையரும் மலர்மகளும் மண்மகளு
மின்னனைநற் றைய லாரே
வாகனமோ வேதமயன் புள்ளாகும், துயிலிடமோ
திரையெறியும் பாலா ராழி
விரிபுனற் சடையானும் மலர்வந்த மேலவனும்
வானவர்தங் கோனு மினறி
விண்ணுறையும் முப்பத்து முக்கோடி தேவர்களும்
நின்பணியே செய்வ ராவர்

---

34. இப்பெருமான் பரம்பொருளே என்பதை விவரிப்பது. யாவகையாலும் இவன் மேம்பாடுடையவன.

இவன்—உண்பன : (பிரள காலத்தில்) கடல்கள், உலகங்கள், மலைகள். வருபுனல்—அலைத்து வரும் நீர் அடர்ந்த. பொழில்—உலகம். மலை—குல பர்வதங்கள். அசனம்—உணவு.

வாழிடம் : பரமபதம். வீயாத—அழிவில்லாத. வான்—பரமபதம்.

ஆசனம் : அரவு—ஆதிசேஷன்.

இரு மருங்கிலும் இவன் அணைக்கும் மங்கைமார் : மலர் மகள், மண் மகள், இவர்கள் போன்ற மங்கையர். இனனனை—இவர்கள் போன்ற. நல் தையலார்; தையல்—பெண். இவனது பேரெழிலை அனுபவிப்பவர்.

வாகனம்: கருடன : புள்—பறவை.

துயிலிடம் : திருப்பாற்கடல். திரை எறியும்—அலைகள் வீசுகின்ற.

இவனுக்குத் தொண்டு செய்வோர். புனல் விரி சடையான்—கங்காதரன். மேலவன—பிரமன்: பெருமான் படைத்தவர்களுள் முதல்வன். வானவர் தம் கோன—இந்திரன். மற்றும் முப்பத்து முக்கோடி தேவர்.

விரிகதி ரிருசுடரும் நிற்பனவுந் திரிவனவும்
　　நின்னரிய லீலைக் காவ
　விரிபொழில்வாய் கண்ணபுரஞ் சேர்ந்தாய்நின்
　　　　　　　　　　　　மேன்மைதனைப்
　　புவியோரு ளோர்வாரி யாரே?

## 35. பன்னிருசீராசிரிய விருத்தம்

தலைவி பெருமானது திருவுருவைத் தீட்ட முயனறமை

ஆரா வன்பின் வயமாகி
　　யனபன மேனி வளனெல்லாம்
அடங்க வரையத் தூலிகையை
　　யேந்தி வெள்கிச் சாய்ந்தேனே
நீரார் கமல மலர்க்கண்ணும்
　　நிகரில் முல்லை நகைதானும்
நுதலுங் குழலும் நீண்முடியும்
　　நிலவார் குழையு மைம்படையும்

---

லீலைக்காவன : சூரிய சந்திரர், சராசரங்கள். விரிகதிர்—கதிர்விரி, கிரணஙகள் நிறைந்த. இரு சுடர்—சூரியன, சந்திரன். ஓர்வார யாரே? "தனனொழி மெயமமுன யகரம வர இகரந் துனனும்" எனபது விதி.

35. திருமேனியின கட்டெழிலால் பெருமை. "ஸாக்ஷாத் மந்மத-மந்மத :"; "காமனறன் தாதை" என்பன குறிப்பு. தலைவி, பெருமானின கட்டழகை ஓவியத்தில் தீட்ட முயன்று, வரைய முடியாமல வெட்கமுற்றது

அடங்க வரைய—சிறிதேனும் விடாமல், முற்றும் ஓவியத்தில் காட்ட. தூலிகை – எழுதுகோல்.

ஓவியத்தில் அமைசுக விரும்பியவை. நீரார் கண்—ஆழ்ந்த நீரில மலருந தாமரை போல, அழகு வாய்ந்த கண்கள். "நீரார் கமலமபோல் செங்கணமால்" (திருமங்கையாழ்வார்) முல்லை நகை—மலரும் முல்லை போனற முறுவல் நுதல நெற்றி; மேலிடம். குழல் - கறுத்த மயிர்க் கறறை. நீள் முடி : மேலோங் குங் கிரீடம்; உலகோர்க்கும் வானோர்க்கும் இவனே தலைவன் எனறு காட்டும் கிரீடம். நிலவு ஆர் ஒளி பொருந்திய. குழை—மகரக குழை, குணடலங்கள்; செல்வத்தைக் காட்டுவன. ஐம்படை : வாள், தண்டு, சங்கு, சக்கரம், வில்.

காரார் மார்பிற் கவுத்துவமுங்
கலனும் மறுவும் பூமகளும்
கழலும் புனையும் பூம்பட்டும்
செவ்வி சுழிப்பத் திகைத்தேனே
பாரோர் வாழப் பிறந்தாரும்
பலவா நுண்மை பயின்றுந்தம்
படியி னொளியி னொருகூற்றைப்
படியக் காட்டுந் தகவினரோ?

### 36. எணசீராசிரிய விருத்தம்
காலம்

இனவிடைக ளேழடர்த்த மாலழகர் சௌரி
எனபாலே வரவிசைந்த கார்கால மெங்கும்
கனமதிரப் புனல்பொங்கி சுழித்தோங்குங் காலம்
கனதனமு மழல்பொங்க விழித்தேங்குங் காலம்

---

கவுத்துவம—கவுத்துவமணி. கலன்—ஆபரணங்கள். மறு—ஸ்ரீவத்ஸம். பூமகள்—பெரிய பிராட்டியார். கழல்—திருவடிகள். செவ்வி சுழிபப—அழகு மயமாய் எங்கு மடர்ந்து, பெரு வெள்ளம்போல் சுழல்கொள்ள. ஒவ்வோரிடத்தும் ஒவ்வொரு வண்ணமுமாக வெள்ளமிட.

என்னால் இயலவில்லை என்பது வியப்பன்று.வாலறிவனான இறைவனும் இது செய்யக் கூடுமோ? பாரோர்.. பிறந்தானும் இதுபோல் மேலும் அவதாரங்கள் பல செய்து, இக்கலையைப் பலவகையால் பயின்றாலும். படி—திருமேனி; அழகின் வளம். படியக் காட்ட—உள்ளவாறு காட்ட. சாந்தீபினியிடம் இவன் அறுபத்து நானகு கலைகள் அறுபத்து நான்கு நாட்களில் பயினறதுபோல் பல பிறவிகளில் பயின்றாலும். "திருமாலே கட்டுரையே!" எனபது போல் நின்றது.

36. கார்காலத்திலே வந்து கூடுவதாகச் சொன்ன தலைவனை நினைத்துத் தலைவி இரங்குவது.

மாலழகர்—அடியாரிடத்துப் பிரேமம் வாய்ந்தவரும், அழகே உருவானவரும். வர இசைதது—வருவதாக இசைந்த. கனம்—மேகம். புனவ்—மழைநீர். பொங்கி—பெருகி. கனதனமும—விம்மிய இரண்டு முலைகளும். அழல் பொங்க—காமதாபத்தால்.

வனமதிரப் பாயருவி களிறலைக்குங் காலம்
மனமதிர வாய்வெருவக் குளிருலைக்குங் காலம்
முனையதிரப் பொருநரினம் குடிலுறங்குங் காலம்
முடிவினறிக் கொடுவினையேன நெடிதிரங்குங் காலம்.

## 37. எண்சீராசிரிய விருத்தம்

மடக்கு

கால மிகந்தானுங் கால மிகத்தானும்
காளை மலையானுங் காளை மலைத்தானும்
ஞால மிடந்தானும் ஞால மிடத்தானும
ஞாயி றொளிர்ந்தானும் ஞாயி றொளித்தானும்

---

வனம் அதிரப் பாய் அருவி—பேரொலியால் வனம் அதிருமாறு பாய்கின்ற அருவிகள். களிறு அலைக்கும்—யானை களையும் அடித்துக் கொண்டு பாயும். மனம் அதிர—குளிரால் மனம் பறையடிக்க. வாய் வெருவ—வாயாலே "ஐயோ" என்றஞ்ச. உலைக்கும்—துன்புறுத்தும். முனை—போர்முனை பொருநர்—போர் செய்யும் வீரர். குடில். உறைவிடங்களில். நெடிது—நெடுங்காலம்; முடிவினறி

37. இவ்வாறு தலைவியை நைவிப்பவன் விசித்திரச் செயல் கள் வல்லவன்.

காலம் இகந்தான்—காலத்தைக் கடந்தவன்; காலம் நடையாடாத பரம பதத்திலிருப்பவன். காலம் இவற்கிலலை. காலம் இகத்தான்—இகத்திலே அவதாரங்கள் செய்து, கால வரைக்கு உட்பட்டவன இராமாவதாரத்தில் துர்வாசனும், கிருஷ்ணாவதாரத்தில் வாயுவும் இவன பூமியில் வாழ்வதாகக் குறித்த நாள் முற்று பெற்றதை நினைவூட்டினர்.

காளை மலையான்: ரிஷபகிரி எனற திருநாமம வாய்ந்த திருவேங்கட மலையான். காளை மலைத்தான்—ஏழு ரிஷபங் களையுங் கொனறவன.

ஞாலம் இடந்தான்—வராகப் பெருமானாய் ஞாலத்தைக் கோட்டில் உயர்த்தான். ஞாலம் இடத்தான்—அர்ச்சை நிலையில் இங்கு உறைபவன. ஞாலம்—பூமி.

ஞாயிறு ஒளிர்ந்தான்: சூரியமண்டலத்தில் விளங்குபவன். ஒளித்தான—பாரதப் போரில்.

வேலை யடைந்தானும வேலை யடைத்தானும்
வேத முறைந்தானும் வேத முரைத்தானும்
ஆலி னிலையானு மாலி நிலைத்தானும்
கண்ணி லுறைத்தானுங் கண்ண புரத்தானே!

## 38. கட்டளைக் கலித்துறை

புரவி தடிந்த பெருமான் புரஞ்சூழ் பொழிலிடையே
பொருவிற் கொடியொன்று காரும் பிறையும் பொருகயலும்
பரவு சிலையும் பணையு மிணைக்கோங்கும் பாடலமும்
மருவித் துவளும் மருங்கி லுரமினறி வாடுவதே!

வேலை அடைநதான்—திருப்பாற்கடலில் துயினறவன்; அன்றிக் கடலில் அணைகட்ட, அதன் கரையில் சாய்ந்தவன். வேலை அடைத்தான—கடலில் அணை கட்டியவன்

வேதம் உறைந்தான்; "வேத முதல்வன்" என்றவாறு வேதத்தால் பாராட்டப் பெற்றவன் வேதம் உரைத்தான்—அன்னமாய வேதங்களை வெளியிட்டவன; ஹயக்ரீவனாய் உபதேசித்தவன.

ஆலின இலையான-பிரளய காலத்தில் ஆலிலையில் துயினறவன ஆலி நிலைத்தான்-திருவாலியில் நிலையாக உறைபவன.

கண்ணில் உறைந்தான: "காணுமோ கண்ணபுரமென்று காட்டினாள்" என்றவாறு, திருமங்கையாழ்வார் காட்டுமாறு.

38. தனது கணணில் உறையுங் கண்ணபுரத்தானை நினைத்து விசித்திரமான கொடியொனறு வாடுகிறது. ஒரு கொடியும் ஏந்தாத சிலவறறை இப்பெண்கொடி ஏத்தித் துவள் கின்றது. இக்கொடி-இந்தப் பெண்; தலைவி.

புரவி ..பெருமான்—கேசி என்ற அசுரனைக் கொன்றவன். பொரு இல் கொடி: ஒப்பில்லாத கொடி. எவ்வாறு?

இது தாங்குவன· கார், பிறை, இரட்டைச் சிலை, பணை, இணைக் கோங்கு, பாடலம்.

கார். மேகம் போற் கறுத்த கூந்தல். பிறை—நெற்றி. பொருகயல்கள்: ஒன்றையொனறு எதிர்ப்பதுபோல், கயல் போனற கணகள். பரவு சிலை—புருவங்கள். பணை—இள மூங்கில் போனற தோள்கள். இணை கோங்கு—கோங்கு மலர் போன்ற இணைமுலைகள்.

## 39. பதினான்கு சீராசிரிய விருத்தம்
### தாய் இரங்கல்

வாடி நின்ற பாரின் மங்கை சங்கை மங்க மாகடல்
வரைய டர்த்து மேல்ந டந்து வில்லு யர்த்த தன்றியும்
மோடி மன்னு கோயில் தன்னுள் வாடி நின்ற வல்லியை
முன்னை யுன்னு மன்ன னேங்கத் தேரு யர்த்தும்,
ஆவலால்
ஓடு புள்ளை யூர்ந்து வில்லி புதுவை வந்த தையலாள்
ஒள்வ ளைக்கை பற்றி யங்கு மேவி நின்ற கொற்றவன்

---

பாடலம்—பாடல மலர், இளஞ் சிவப்பானது; இங்கு உதடுகள். மருவி துவளும் - இவை யாவற்றையும் ஏறறுத் துவள்கினறது. மருங்கில்—அருகில். உரம—பலம்; கொழுகொம்பாகிய தலைவன்; கொழுநன்.

39. இவ்வாறு வாடிய பெண்டிற்கு இறைவன அருள்செய்த தைத் தலைவி கூறுவதாகத் தாய் கூறுகிறாள்.

முதலில் சானகிப் பிராட்டிக்கு உதவியது. பாரின மங்கை—படைச்சாவில் எழுநத சானகி. சங்கை—பயம். மங்க—தீர, வரை அடர்த்து—மலைகளைக் குவித்து அணை கட்டி. வில் உயர்த்து—எதிரியும் வியக்குமாறு வில்லேந்திக் கணைகள் பெய்து

பின்பு உதவியது ருக்குமிணிப் பிராட்டிக்கு. மோடி மன்னு கோயில்: காளிதேவியின கோயிவில் இவள் கணணனின வரவை நோக்கித் தங்கியிருந்தாள். வல்லி கொடி; ருக்குமிணிப் பிராட்டி. முனனை உனனும் மனனன் முன்னமேயே மணக்க விரும்பிச் சடங்குகள செய்து காத்துக் கொணடிருந்த சிசுபாலன். "கண்ணாலங் கோடித்துக் கனனி தன்னைக் கைப்பிடிப்பான திண்ணார்ந்திருந்த சிசுபாலன தேசழிந்து" (ஆண்டாள்).

அர்ச்சையில் உதவியது: ஆண்டாளுக்கு. ஸ்ரீரங்கநாதனது வரவை நினைந்து மணத்திற்கான திருநாளிலே ஆணடாள் ஆவலுடன் காத்திருந்தாள். அப்போது கருடனமேல் ஊர்ந்து விரைந்தான் பெருமான் வில்லி தையல் ஆண்டாள் ஒள் வளைக் கை—ஒளி வாய்ந்த வளைகள் அணிந்த கை கொற்றவன்—இறையவன், ஸ்ரீரங்கநாதன்

ஈடி லாத தோள்கள் நாடி வாடி யேங்கு மென் குயில்
என்றுஞ் சௌரி ராச ரெனறு கூவு மெனன செய்யவோ?

## 40. இருவிகற்ப நேரிசை வெண்பா

செய்ய கரநீட்டி மண்ணேற்றாய், சேணூர்மன்
செய்ய தெரிவை தனையேற்றென் செய்யக்
கணபுரத்தாய்! நின்றாய் கரநீட்டி? நினறன்
வணமுரைப்பார் வையகத்தி லார்?

## 41. பன்னிருசீராசிரிய விருத்தம்

களி

வைய மிரந்தான வைகுஞ்சீர்க்
கண்ண புரததே மெய்யடியீர்!
மதுவை யட்டான மலரடிதோய்
மதுவை நாளும் மேவீரே

---

கொற்றவனது, ஈடு இலாத தோள்கள் நாடி— ஒப்பற்ற பேரினபந் தருவதால் ஒப்பில்லாத தோள்களை அணைய விரும்பி, என குயில்—எனது குயில்; மென்குயில் எனினும் ஒக்கும் கூவும்—அவனை அணைந்து களிப்புடன கூவக் கூடிய இவள், இவ்வாறு நொந்து கூறுவதே! என செய்யவோ?—என் நிலைதா னென்ன? இவளைப் பார்த்து இரங்குவதே!

40. பெருமானை நோக்கிக் கேடபது நீ கரம் நீட்டி நிறபதெனெ? செய்ய கரம் தாமரைபோல் சிவந்த கரம். மண் ஏற்றாய்: மாவலியிடத்து "மனனா! தருக" எனறு இவன கேட்க மாவலி இவனது அழகில் ஈடுபட்டு, "என்னால் தரப்பட்டது" என்றான. சேண் ஊர் மன—உபரிசரவஸ". தெரிவை—பெண், பதுமினித் தாயார். இவவாறு நீ மண்ணும் பெண்ணும் ஏற்றும், பின்னும் கரம் நீட்டுவது என செய்ய? யாது கருதி? "கண்டவர், தம் (தமது) மனம வழங்கும்" எனறவாறு, காண்பாரது உள்ளத்தை ஏற்பதற்கோ? வணணம இயல்பு. மண் ஏற்றாய், பெண் ஏற்றாய், மேலும் வேண்டுவது என?

41 மெய்யடியார் களிக்கும் வகை கூறுவது. வெளிப் படையாகக் காண்பது: களிப்பதற்கான மது, காவி இவை அருந்துவது, காவு கொடுக்கக் கோழி, ஆடு இவற்றைப் பேசி, இரவு முழுதும் களிப்பிற் கழிப்பது.

உய்யும் வகையே யிதுகண்டீர்
வாரீர் கரங்கோத் தங்காடி
ஊரும் பரிவாற் பலபேரும்
பிதற்றிக் களிப்பீரே
மெய்யார் சிறைவா ரணமுறீர்
விரியு மன்பால் மாணாடும்
மெய்யே பகர்வீ ரென்றென்றும்
மேலும் பதநீர் பெறுவீரே

---

வையம் இரந்தான்—கரம் நீட்டி மண்ணை ஏற்ற வாமனன். வைகும்—உறையும.

மதுவை அட்டான—மது என்ற அசுரனைக் கொன்றவன. மலர் அடி தோய்—மலர்போனற திருவடிகளில் தோய்கின்ற. மதுவை—தேனை. மேவீர்—விரும்புவீர். மது மேவீர்—கள்ளை விரும்புவீர் (வெளிப் படையாகத் தோன்றுவது)

உய்யும் வகை: வாரீர்—வருவீர், வந்து செய்வது: கரங்கோத்து அங்கு ஆடி—இந்த திவ்யதேசத்தில் திரண்டு கரங்களைக் கோத்துக் கொண்டு பக்தியால் ஆடி; இயல், திருமொழி இவற்றைப் பாடி, பெருகும் களிப்பாலே ஆடி. வெளிப்படையாக: கரம் கோத்து அங்காடி வாரீர். அம் காடி—மயக்கந் தரும் காடி வாரீர்—வார்ப்பீர் பருகுவதற்காக.

பின்பு, ஊரும....களிப்பீர்—ஓங்கும் பரிவாலே அவனது திருநாமங்களைப பிதற்றுவீர். அன்றி அவனது ஊரும் (திருக்கண்ணபுரத்தின பேரும்) திருநாமங்களும், "திருக் கண்ணபுரம் சொல்ல நாளுந் துயர் பாடுசாராவே," "பேராயிர முடைய பேராளன்" எனபன குறிப்பு.

பெறுவன: மெய் ஆர் சிறை (சிறையின) வாரணம்—உடற் பிறவியால் அடைரும் பிறவிகளாகிய சிறையிலிருந்து நீங்குதல். பின்பு பெறுவது: மாண் நாடு—பரமபதம். மேவும் பதம்—யாவரும் விரும்பும பரமபதம். நீவிர் பகர்வது: மெய்யே மாண் ஆடு கபடமில்லாமல் பெருமானுக்கு வெற்றி! ஆடு—வெற்றி. "ஜிதம் தே புண்டரீகாக்ஷ!" எனறு.

செய்யா ரலங்கல் சிரங்கொண்டு
சிவப்பக் கண்கள் திளைத்தாடித்
தெருவில் திரண்டு குலங்குலமாத்
தேவர் காணக் களிப்பீரே.

## 42. எழுசீராசிரிய விருத்தம்

### தூது

களித்துவருங் காரிகையர் கூடவென வேய்ங்குழலிற்
கானமெழ வூதுதனி மாயன்பால்
விளித்திவளோ தூண்டில்படும மச்சமென வாடிமிக
வெம்புமெனக் கூறிவிரைந் தேகீரோ?

---

வெளிப் படையாகக் காண்பது : சிறைவாரணம்—கோழி மெய் ஆர்—கொழுத்த. மாண் ஆடு—பெரிய ஆட்டுக் கடா. பகர்வீர்—கூறுவீர். சிறுதெய்வங்களுக்குக் காவு இவையாவன பதநீர்—பனங்கள்; போதை தருவது

பினனும் சிரத்தில் பெருமான சூடிக் களைந்த திரு மாலையை தரித்து, வீதியில் கூட்டங் கூட்டமாகத் திரிவீர்; செய்—அழகு. அலங்கல்—மாலை. கண்கள் சிவப்ப -இரவு முழுதும் பாடி ஆடுவதால்; போதையால். தேவர்—நித்யசூரிகள். பூசுரர் என்ற அடியார்.

42 தனது மேன்மையைச் சிறிதுங் கருதாமல் உதவும் பண்புடைய இறைவனிடத்துத் தலைவி வண்டுகளைத் தூதாக அனுப்பி, "என தலைவன் கால தாமதஞ் செய்வது, அவனது பண்பினுக்கு ஏற்குமோ?" எனறு கேட்பது.

வண்டுகள் செய்ய வேண்டுவது : இவள் வெம்பும் என்று தலைவனிடங் கூறுவது.

பெணகளிடம் பிரேமம் வாய்ந்த இவன் செய்தது : பெண்கள் கூடுவதற்காகக் குழலூதியது காரிகையார்—அழகுள்ள ஆயர் சிறுமியர் கானம்—இசை, சங்கேதமாக இவர்களது பெயர் களைச் சொல்லி ஊதினான்.

இவள் நிலை. இவள் இவனை விளித்துப்படும் பாடு, தூண்டில் படும் மச்சம் என—உயிர் ஊசலாடும் நிலை : முடியவும் மாட்டாமல், வாழவும் மாட்டாமல்.

விளித்தவொரு வேழமதைக் காககவென வேதமயன்
மேனிபடிந் தோடுமிவர்க் கீதாமோ?
வளைத்ததிட வணணமதிட கணணபுர வொண்ணகரம்
மனனியுறை புள்ளினமே! கூறீரே.

## 43. கட்டளைக் கலித்துறை

புள்ளும் பெருமான புகழறை கண்ண புரமமரும்
விளளுங் குவளை விழியினாய்! நினபால் விருப்புடையார்
உள்ளி விடுத்த தழையாம் பிடிநீ, உயிரனையார்
வள்ளல் வழங்குவர் பொன்னும் வரவும் வரைந்தனரே.

---

பெருமானது திருவருள் தப்பாது என்பதற்குக் காரணம். தும்பி யானை. விளித்த: ''தாராயணா ஓ மணிவண்ணா! நாகணையாய் வாராயென் னாரிடரை நீக்காய்'' என்று கூவி அழைத்தது. இறைவன செய்தது : காக்க ஓடும் ; வேதமயன்—கருடன். ஈ து ஆமோ—இவ்வாறு என்னைத் துடிக்கவிட்டுருப்பது தகுமோ? விளித்தயானைக்கு உதவு மிவர், தூண்டில் படும் மச்சமெனத் துடிக்கும்எனக்கு உ தவலாகாதோ? ஒண் நகரம்—உயிர்களைக் காத்து அருள் செய்யும் இறைவன் உறைவதால், பெருமை வாய்ந்தது, இத்தலம்.

43. கலங்குந் தலைவியிடம் பாங்கி கூறுவது உனது உயிரனையார் விரும்பி அளித்த தழை இது; இதனை ஏற்பாய். உனனிடம வரவும் நிச்சயித்துள்ளார்

விள்ளும் குவளை விழியினாய்!—மலர்ந்த குவளைபோல் நயனங்கள் வாய்நதவளே! உன நோககே அவரது உள்ளத்தைக் கவராதோ? அவர் நினபால் விருப்புடையவர்.

ஊரின மேனமை : புளளும்...அறையும்—பறவைகளும் புகழை ஒலிக்கும். அறையும்—பறைபோல் ஒலிக்கும்

அவர் செய்தது. உள்ளி—விருமபி. தழை இதை ஏற்பாய். பிடி நீ—இதனை ஏற்பாய். நீ பிடி (பெணயானை); அவர் மதயானை (குணபால மதயானை); ஆதலால் பரிவாலே அவர் அளித்தார். மேலும், வள்ளல்—வரையாது வழங்குவர். பொன்—பொன்மயமான பூணினங்கள் வரவும் வரைந்தனர்—வரவுதனையும் நிச்சயித்துள்ளார். உன் கண்ணழகால், உன்னைக் காணவருவார்.

## 44. எண்சீராசிரிய விருத்தம்

### பாண்

வரமருளும் பெரியரேனப் பாடிவரும் பாண!
வரவொழியென் பாடினியுன் பாடினிபாற் போவாய்
அரவரசா மமளியிலே யமருமுயி ரன்னார்
அரவதுபோ விருநாவர் செவிநிலைய மேலார்
வரவுரைசெய் வரத்தைமிக மறந்துதனி நினறார்
வண்ணமிகு பரத்தைமிகப் பேசியிகந் தோய்வர்

---

44. தலைவனது வரவு தாமதிப்பதால், தலைவி மனமுடைந்து ஏங்க, தலைவன் அனுப்பிய பாணனைக் குறித்துக் கூறியது. பாணன்—இசைபாடுவோன. பாணன் கூறியது. உன தலைவர் வரம் அருளும பெரியர்

தலைவி சொல்லுவது: பாணனே! இவ்வாறு கூறி நீ வரவேண்டா. இனி எனபாடு வரவு ஒழி—எனனிடத்து நீ வரவை ஒழிப்பாய்; உன் பாடினிபால் போவாய்—பாடினியாகிய உன மனைவியிடஞ் செல்; நீ கூறுவன வெல்லாம நம்புவாள்.

பாணன கூறுவது எவவாறு நம்ப முடியாது? தலைவி: அரவரசாம் அமளியிலே அமரும்—ஆதி சேஷனாகிய படுக்கையில் சயனித்திருப்பார் உயிர் அன்னார்—எனக்கு உயிர் போன்றவர். இவ்வாறு அரவில் சயனித்திருப்பதால், அரவு அது போல், இரு நாவர்-சொன்ன சொல் நிலைப்பதில்லை "பாம்பணையார்க்கும் தம பாம்புபோல நாவும இரண்டுள வாயிற்று" என்றாள, ஆண்டாள். செவி நிலையும் ஏலார்: செவி நிலையும் அவ்வாறே பாம்புக்குச் செவி யில்லை; செவி இருந்தாலனறோ இவர நாம சொல்லுவதை ஏற்பர்.

அனறியும், வரவு உரைசெய் வரத்தை மிக மறந்து வருவ தாகச் சொல்லிய வருதலை அல்லது வரத்தை, அறவே மறந்து. தனி நினறார்—செய்யாமல தனித்து நினறார்; எனனை விட்டுத் தனித்து நினறார்.

வண்ணம் மிகு பரத்தை இகற்து ஓய்வர்—நிறத்தால் மேம்பட்ட பரத்தையை (விலை மகளை)ப்பற்றி மிக உரைத்து, இகந்து—குறைபடக் கூறி ஓய்வர். அர்ச்சையில் உறையும் இவர் சிறந்த பரத்வ நிலையைக் குறைபடக் கூறுவர்.

விரையெறியும் பொழிலணையுங் கண்ணபுர மேயார்
மெய்யிதுவே யெனநிலையை யென்னுமினிக் கேளார்.

## 45. எண்சீராசிரிய விருத்தம்

### ஊசல்

இனித்தமொழி யிளம்படியர் நால்வர் நுந்தம்
எழில்பாடி யிருபாலுந்தோய, மேலாந்
தனித்தமிழின தனியமுதை மாந்து மன்பர்
தமைமறந்து நும்மெழிலி லாழ்ந்தது சூழ
முனித்தலைவன் கரங்குவித்துத் தென்பா லேத்த
வேதமயன வடபாலே வணங்கித் தோயத்
தனிக்கனியாய்த் தாதர்த மூள்ளங் கொண்டீர்
கணபுரத்தீர்! தமராட ஆடீ ரூசல்.

---

விரை—பரிமளம். என நிலையை.. கேளார்—இனி என்னுடைய நிலையைச் செவியாலே ஏற்கவும் மாட்டார் போலும். இச் செய்யுள், தொனிப பொருட் செறிவு.

45. இறைவன பொனனூசல் ஆடும்போது அடியாரது அனுபவம.

முதன முதலாகப் பிராட்டிமார், இளம்படியர்—பெண்கள்; பிராட்டிமார். பெருமானது அழகை அனுபவித்துப் பாடி மருங்கில் உறைவர். மேலாம் . அனபர்—தில்ய ப்ரபந்தங்களின் சுவையை அனுபவித்து, அதன் பயனால் பெருமானை அனுபவிக்கும் ஆற்றல் வாய்ந்தவர். அமிழ்து—சுவை.

முனித்தலைவன—தண்டக முனிவன். தென்பால் ஏத்த—தென்பால் அமர்ந்து ஏத்த. வேதமயன வேதமே திருமேனியாக வாய்ந்த கருடாழ்வான. இவர் இருவரும் பெருமானது பக்கத்தில் உறைவது குறிப்பு.

தனிக்கனியாய்—ஒப்பற்ற கனியாக, ஈடும் எடுப்பும் இல்லாத கனியாகி. "கணபுரத்தென கனியே!" என்றார் திருமங்கை யாழ்வார். தனிக்கனி: தனனைத் தன அன்பர் அனுபவிக்கா விடில், இக்கனி நைந்து கெட்டு விடும். தாதர்தம் உள்ளம் கொண்டீர்—ஒப்பற்ற அழகாலே. "கண்டவர், தம் மனம் வழங்கும்" என்றபடி. தமர்ஆட— உம்மைக் கண்டு களிப்பாலே ஆடுமாறு, ஊசல் ஆடீர்.

## 46. எழுசீராசிரிய விருத்தம்

### தவம்

ஊசலென வாடிவரு மினபமொடுந் துன்பமிவை
ஓயவென வூமரெனக் குகைதோய்ந்தும்
காசினியில் நாடுபல சென்றுபுனல் நின்றுமழல்
காயவத னூடுபுகுந் தகையீரே!
வாசவனு மோதமுறை மோங்கலொடு வேதமயன்
வாழ்த்துமுயர் கண்ணபுர நகர்வாழும்
ஈசனவன தாளிணையை மேவியவன் சீலமதை
யேத்தியவன தாதரடி பணிவீரே.

---

46. பிறவி நீங்கிக் களிப்பதற்காகத் தவங்கள் செய்ய வேண்டா; சௌரிப் பெருமானின திருவடிகளை நாடி, அவனது திருநாமங்களைப் பாடி, அவனது அடியார்களது திருவடிகளில் பணியவேண்டு மென்பது.

ஊசல்... ஓய என— மாறி மாறி வரும இன்பதுன்பங்கள் நீங்கி நலம்பெற. ஊமர் என—மௌனமாக. குகை தோய்ந்து, காசினியில் (உலகில்) நாடு பல—புண்ணியத் தலங்கள். புனல் நின்றும்—நீர் நிலைகளில் நின்றும் அழல் காய, அதன் ஊடு புகுந்து— நெருப்பின நடுவே நின்று; பஞ்சாக்நிமத்யததில் தோய்ந்து. தகையீர் - இவ்வாறு தவத்திற்குத் துணியும் பெரியீர்!

நீவிர் செய்ய வேண்டுவது, இவையல்ல; மிகவும் எளியது.

வாசவன—இந்திரன். ஓதம் உறை ஓங்கல்—கீழ்த்திசைக் கடலிலே மறைந்துறையும் மலை, கருட பர்வதம் வேத மயன—கருடாழவான் இவர்கள் வாழ்த்தும் சிறப்புடையது திருக்கண்ணபுரம். வாசவன் வணங்கி, "உத்பலாவதகே திவ்யே" எனற ச்லோகத்தை இசைத்தான. கருட பர்வதத்திற்குப் பெருமாள் மாசி மாதம் மகத்தன்று காட்சியருளுகிறான். கருட பகவான பெருமானது முனனே நின்று, பெருமானை அனுபவிக்கப் பெற்றான.

நாம் செய்வது பெருமானது சீல குணத்தைப் பாடி, அவனது அடியார்களது திருவடிகளில் பெருமானோடு, பணிவது. அவனது அடியாரை ஏத்துவதுதான் நிறைந்த ஞானத்தின் பயன்.

## 47. கட்டளைக் கலித்துறை

பணியாக் கயவ ருளமும் படியும் பரிவுடைமா
மணியா மடியார் மனத்தடர் தேனாம் வளர்பொழில்வாய்
அணியாங் கணபுரக் கோமா னடிக ளவையணைந்து
பிணியார் பிறவி பெயர்ப்பீர், பெறுவீர் பெரும்பதமே.

## 48. பதினான்குசீராசிரிய விருத்தம்

தார்

பெரும்பதத்த சௌரீசர் பேரன்பிற் காரகமுந்
தாமேவத் தன்னிலையும் பேரப்
பெண்மதியை நிலைகுலைத் த நாண்மதியும் நிலைகுலையத்
தலைச்சங்க நாண்மதியங் கண்டேன

---

47. ''ந நமேயம்'' (வணங்க மாடடேன) எனற இராவண னிடத்தும் பரிவாலே, ''யதி வா ராவண ஸ்வயம்'' (இராவணன் வந்தாலும் ஏற்றுக் கொள்வேன) எனற இறைவனது திருவடி களை நாடிப் பிறவி நீத்துப் பெரிய பதமும் பெறக்கூடும்

உளமும் படியும்— மனத்துள்ளே தோய்ந்து, திருந்தும் வகையை ஆராய்த்துறையும் பண்புடையவன இறையவன. இவன் மாமணி: மணிபோல பெருமதிப்புடையவன. மணிபோல் நமது கையுள் அடங்கும எளிமை வாய்ந்தவன அடியார் மனத்து அடர் தேன— உள்ளத்துள் தோய்ந்து அவர்களைக் களிக்கச் செய்து தானும் களிப்பான.

பிணி ஆர் பிறவி பெயர்ப்பீர்: ''பாத(ம்) நாளும் பணியத் தணியும் பிணி'') பெரும்பதம் வைகுந்தம.

இறைவன் மணி, தேன, கோமான, பிறவிக்கு மருந்து.

48. தலைவிக்குத் துனபம் விளைவிப்பன: முழுமதி, குளிர்ந்த காற்று, கடலி னொலி தான அணிந்த தாரைத் தலைவன் தலைவிக்கு அனுபப, இவளது உள்ள நிலை மாறிய வகை.

பெருமபதத்த சௌரீசர்—எனனை நினைக்காதவாறு பெரிய நிலையில் நிற்பவர். ''செல்வர் பெரியர், சிறுமானிடவர் நாம் செய்வதென'' (ஆண்டாள்)

இவர் செய்தது. பேர் அனபில்—பெரியதொரு அன்பு கொண்டு; இதன விளைவாகத் தமது கார் அகம் மேவ— தமது கரிய திருமேனியைப் பொருந்தக் காட்ட. மேவ -விரும்ப; எனது உள்ளத்திற் படியுமாறு காட்ட. தன் நிலையும் பேர— பெண்ணாகிய என நிலையும் மாறுமாறு.

சுரும்புதுவை மலரணவு கால்நிலையுந் தான்மாற
அரும்புதுவை தண்காலுங் கண்டேன்
சூழ்ந்ததிரைக் கடலல்லல் தானோயக் கடன்மல்லை
இடவெந்தை நீர்மைதனைக் கண்டேன்
உறுந்துயரை மாய்த்ததனி யனபரவர் தாரதனா
லெனநிலையுந் தானோங்கக் கண்டேன்
உற்றவரு மூரவரு மோதுகொடுந் தூடணமு
முவர்மொழியு மோய்ந்துவரக் கண்டேன்

---

பெண்நிலையை நிலை குலைத்த நாண்மதி—எனதுஅமைதி நிலையை மாற்றிய முழுச்சந்திரன. இவனது நிலை குலைய—இந்தக் கொடிய நிலை மாற. தலைச் சங்க நாண்மதியம் கண்டேன—சிறந்த சங்கம் போல் வெளுத்த முழுச் சந்திரனைக் கண்டேன; இதனால் களித்தேன என்றபடி.

இதுவரையில் தேறும் பொருள் : எனது தலைவர் பேர், அன்பில், காரகம என்ற திவ்ய தேசங்களில் சேர, தன நிலை பேர எனனைத் துனபுறுத்தியதான நிலை மாற. தலைச் சங்க நாண்மதியம எனற திவ்யதேசம் கண்டேன் "கண்ணார் கண்ணபுரங் கடிகை கடிகமமுந், தண்ணார் தாமரைசூழ் தலைச்சங்க மேல் திசையுள்" (திருமங்கையாழ்வார்)

காற்றின நிலை மாறியது. சுரும்பு துவை மலர் அணவு கால்—வண்டு படிகினற மலரைத் தடவி வரும் காற்று இது எனனை வருத்தியது. இந்த நிலை மாறி, அரும்பு துவை தண் கால் கண்டேன் -அரும்பின மேற் படிந்து வீசும் குளிர்ந்த காற்றை அனுபவித்தேன். தேறும பொருள்: அரும்புதுவை: அரிதான ஸ்ரீ வில்லிபுத்தூர், தண்கால : திருந்தணகாவ் என்ற திருப்பதி • இவற்றைக் கண்டேன்.

மேலும சூழநத திரை கடல் அல்லல் ஒய்ந்தது : அலைகள் அடர்ந்த கடலால் நேர்நத துனபம ஒய்ந்தது; இதன் விளைவு : கடல் மல்லை, இடவெந்தை : இந்தத் திருப்பதிகளில் இறைவனது நீர்மையைக் கண்டேன.

வருத்துயரை.. தாரதனால்—எனது துயரை மாய்த்த அன்பர் அனுப்பிய திருமாலையாலே, நிலை ஓங்கியது.

இதுவரையில் பேசிய உவர் மொழிகள் ஓய்ந்தன. உவர் மொழி —தூடணங்கள், மனத்தைத் துனபுறுத்தும் சொற்கள். தூடணங்கள் கூறுவோர் : உற்றார், ஊரிலுள்ளவர்கள்.

விரும்புமணி கலனவையுந் தரளமொடு நாண்மலருஞ்
சந்தனமும் விரும்பிமிகக் கொண்டேன்
வெண்பணில மூதிவரும மேலரவ ரின்றுவரு
மெனறவுரை யுயிரளிக்கக் கண்டேன.

## 49. கொச்சகக் கலிப்பா

அளிக்குஞ் சௌரீச ரடியிணையின் சுவையதனைக்
களிக்குங் ககனத்தார் காண்பதுவோ? கல்லதுவுஞ்
சுளிக்குங் காளியனுஞ் சூலழிநத காருடலும்
ஒளிக்குங் கொடுஞ்சகடு முறுதவங்கள் செய்தனவோ?

---

இப்போது நான விரும்பி ஏறபன: அணிகலன, தரளம் (முத்தாரம்), நாள் மலர், சந்தனம் (கலவை); இவை அவனது வரவை எதிர்நோக்கி பணிலம்—சங்கு. மேலர் அவர்—மீச் சிறந்த என தலைவர. உயிர் அளிக்கக் கணடேன, இராமனுக்கு "த்ருஷ்டா ஸீதா" (கண்டேன சீதையை) என்ற சொற்போல.

49. பெருமானின திருவடியின சுவை நால்வர்க்கு நேர்ந் தது. "ஹாவு ஹாவு" எனறு பாடிக களிக்கும நித்ய சூரிகளும் இதனை அனுபவித்ததில்லை.

ககனம்—ஆகாசம. ககனததார்—ஆகாசத்திலுள்ள நித்ய சூரிகள்; எப்போதும் இறைவனை அனுபவிக்கும் பேறு வாய்ந் தவர்.

கல் அது—சாபத்தால் கல்லுருவாய் நின்ற அகலியை
சுளிக்கும்—சினங்கொண்ட

சூல் அழிந்த கார் உடல் அசுவத்தாமன விடுத்த அபாணடவக கணையால அபியனயுவின மனைவியாகிய உத்தரையின கரு கருகியது. கண்ணபிரானது திருவடி தீண்டப் பெற்று, கரு மீள உயிர்பெற்றுப் பரீடசித்தாகப் பிறநதது

ஒளிக்கும் கொடும சகடு- சகடத்தை மறைத்துச் சகட வடிவில வந்த அசுரன.

உறுதவங்கள்—முறைப்படி இயற்றும் தவங்கள். செய் தனவோ—செய்யவில்லை. திருவடியாலே நலம் தானே வாய்ந் தது. இதற்கு அனபர், அல்லார் எனபது கிடையாது. பெருமா னுடைய அருள் ஒன்றே காரணம்; நிர்ஹேதுக க்ருபை: யாதொரு காரணமுமினறி அவன காட்டுங் கிருபை.



## 50 பதினான்குசீராசிரிய விருத்தம்

மதங்கு

செய்ய வைங்கணை வில்லி தந்தவர்
சௌரி மன்னவர் தாளிலே
சேணி றைந்திடப் பாடு சீருடை
மதங்கி மெல்லிடை! நின்றுகேள்
நொய்ய நினனிடை கொம்மு சீர்த்தொடி
தாளம் நின்முலை மெய்யவே
நூபு ரக்கழல் மேலை மத்தளம்
கண்ட மும்முரல் சங்கமே

---

50. மதங்கி ஒருத்தி தன் கையில் வாளைக் கொண்டு சௌரிப் பெருமானின தாள்களை வாழ்த்திப் பாடியாடும்போது, அவளது அழகில் ஆழ்ந்த ஒருவன் பாராட்டிய வகை.

மதங்கி—ஆடல பாடல் வல்லவள்; பாண்மகள், பதினா றாண்டுப் பெண் மதங்கி மெல்லிடை!: விளி !

செய்ய ..தந்தவர்—ஐங்கணைகளும் கருப்பு வில்லுங் கொண்டவனாய்ப் பேரழகு படைத்த காமனைப் பயந்த. பெருமானது பேரழகு, காமனது அழகுககு ஊற்றுவாய்.

பாட்டின் தரம் : சேண் நிறைத்திட —ஆகாசம் முழுதும் பாராட்டுமாறு, இனிமை வாய்ந்தது. நின்று கேள்: நான் கூறுவதை ஊன்றிக் கேட்பாய்.

உனது அழகு: நொய்ய நுண் இடை—மிகவும் மெல்லியதான இடை கொம்மு -ஒலிக்கும். சிறு துடி -உடுக்கை இடை துடி போனறது.

உனது முலைகள் : மெய்யவே—மெய்யாகவே. தாளம்—தாளம் போல்வன

கழல்கள் : நூபுரக் கழல்—நூபுரம் அணிந்த கணைக் கால்கள் மேலை மத்தளம்—சிறந்த மத்தளம் போல்வன.

கணடம் . கழுத்து. முரல் சங்கம் -ஒலியால் சிறந்த சங்கம் போனறது.

இவள் அரையில் பறையைக் காட்டிக் கொண்டு, பறையை ஒலித்து வாளேந்தி ஆடும்போது, அங்கங்கள் இசைக் கருவிகளா கின்றன எனபது விசித்திரம்.

பெய்யு மொள்வளைக் கைகள தந்திரி
கண்கள் தம்புரு தாமவே
பேரி யோங்கிட வாளை யோச்சிடு
மாற்ற லுன்னிலும் மேலதே
மெய்யி தோதுவன நன்று செய்தனை
உடுககை யிங்ஙனந் தாழ்தலே!
மேவி நிற்பவர் நாட்ட வாளொடு
முனறன் வாவிணை சுழலவோ?

---

கைகள்· ஒளி வளைகள் பெய்யும் கைகள்—ஒளி வாய்ந்த வளைகள் அணிநத கைகள். தந்திரி—வீணை.

கண்கள் தம்புரு தாம் - கணகளோ தம்புரு.

உன்னுடைய ஆற்றல் : பேரி ஓங்கிட—பேரி வாத்தியம் முழங்குவதற்கேற்ப. வாளை ஓசசிடும் ஆற்றல்—ஒலிக்கு ஏற்ப வாளை வீசும் ஆறறல. உன்னிலுமம மேலது—உனது அழகிலும் மேமபட்டது. நினைககில் மேம்படடது.

நான் ஒன்று கூறுவன; இது மெய நனறு செய்தனை—நல்ல காரியமம செய்தாய்! அது என்ன?

உடுக்கை!இங்ஙனம் தாழதலே!—அரையில் கட்டியுள்ள உடுக்கு ஒலிக்காமல் இவ்வாறு தாழ்ந்திருபபதேன்? வேறு பொருள்: அரையில் கடடியுள்ள ஆடை சிறிது தாழநதுள்ளது; இது ஏன? உடுக்கை—உடை.

இதனால நிகழ்வது : மேலிநிறபவர்—உனது ஆடலையும் பாடலையுங் குறித்து விருப்பததோடு நிற்பவர்களது நாட்ட வாளொடு—நாட்டமாகிய வாளோடு, அதாவது கூர்நது நோக்கும் நோககோடு. உனறன் வாள இணை—வாள்போல கூர்நோக் குடைய உனனுடைய கணகள். சுழல ஓ! ஆடவர்களது கணக ளாகிய வாள்களுடன உனனுடைய வாள்களும, வாள போனற கண்களுமம சுழலுவது எனனே! ஆடவர்களது கண்களை வாளெனபது, கூர்ந்து நோக்கலின் எனக.

அங்கங்கள இசைககருவிகளாவது விசித்திரம, ஒச்சும் வகை இதனினுமம விசிததிரம; உடுககை தாழ்ந்தது மேலும் விசித்திரம்.

## 51. இருவிகற்ப நேரிசை வெண்பா

சுழற்கால் சுளித்தீர் சுடரழலு மார்ந்தீர்
அழல்மா சுணங்கீண்டீர், ஆனபின—குழலூதிப்
பூமபொழில்வாய் கண்ணபுரம போந்தீராற் பூதலத்தில்
தீம்பொழிப்பான தீயார் செயல்

## 52. நேரிசை யாசிரியப்பா

தீயாய் நிலனாய்த் திறலார் வளியாய்
வீயா விசும்பாய் விபுலப் புனலாய்ப்
பனனிரு சுடராய்த துனனிடு மொளியாய்
நெனனல் நாளையாய் நிகழ்ந்தருங் காலமாய்

---

51. இறைவன நம்மைக் காக்கும் வகை, கிருஷ்ணாவ தாரத்திற் செய்தவை.

சுழற்கால் சுழற்காற்று. சுளித்தீர்—சினந்தீர், கொன்றீர். கஞ்சனது ஆணையால் கண்ணனைச் சுமந்து செல்ல வந்த அசுரன் சுழற்காற்றின் வடிவம் ஏற்றான்.

சுடர் அழல் ஆர்நதீர்—பசுக்கள் மேய்ந்து வரும்போது நேர்ந்தது இது. எதிர்பாராமல் காட்டில் தீ வளர, ஆயர் கூச்சலிட்டனர். கண்ணன அவ்விடஞ் சென்று அழலை வாயில் ஒடுக்கிக் கொண்டான். ஆர்ந்தீர்—உண்டீர்.

அழல் மாசுணம் கிண்டீர்—அழல்போற் கொடிய மலைப் பாம்பைப் பிளந்தீர் மலைப் பாம்பு—அகாசுரன்.

ஆன்பின: ஆன்—மாடுகள். பசுக்கள் மேய்த்து வரும் போது களைத்துப் பொழில் வளங் கண்டு திருக்கண்ணபுரத் தில தோய்ந்தீர். "கனறு மேய்த் தினிதுகந்த காளாய் என்றும், கணபுரத்தென் கனியே எனனும்" என்பது குறிப்பு. தீயார் செயல் தீம்பு ஒழிப்பான—கொடியவர்களால் வரும் துனபத்தைப் போக்குவதற்கெனவே, கண்ணபுரம் போந்தீர்.

52. "ஸர்வாங்க ஸுந்தரன்" எனற திருநாமத்திற்கேற்ப, இவனது கட்டழகை விவரிப்பது.

தீயாய் ..கலைகளாய்: யாவையும் யாவருந்தானாய்ப் பெருமான நிற்கும் நிலை.

திறல் ஆர் வளி—வலிமை வாய்ந்த காற்று. விபுலம் பரந்த.

மலர்வரு மயனாய் மால்விடை யரனாய்
அலகிலாத் திறல்வா யமரர் தாமாய்
அண்ட ரகந்தனு ளண்டுமோ ரமுதமாய்
அண்ட மகட்டினு ளொண்டுபே ருருவாய்ச்
சொல்லாய்ப் பொருளாய்ச் சுவையாய்ப் பயனாய்ச்
சொல்லார் மறையாய்த் துவளாக் கலையாய்
விளங்கும மேலனே! விண டனி லோகங்கும்
வளங்கொள் கண்ண புரமுறை வள்ளால்!
நினனுடை யுருவெழில் நெடுங்கால் நுகரினும்
பன்ன வரிதாம்; பதும மலர்மிசை
மன்னுநின னிணையடி மன்னுபொற் கழலில்
.........................

துன்னிடும் ஒளி: தீயும் தினகரனும் தீங்க மற்றைச் சுடர்கள்.

இறைவன் காலத்தை இயக்குபவன். நெனனல்—நேற்று. மூவகைக் காலம் குறிப்பு.

தேவர்களுக்கு அநதராத்மாவாகி அவர்களை இயக்கிவைப் பவன. அயன—பிரமன. மால் விடை—பெரிய வடிவுடை ரிஷபம் அலகு இலாத் திறல்—அளவிட முடியாத வலிமை.

அண்டர்—அண்டங்களிலுள்ள உயிர்கள் அகம்—மனம். மண்டும் அமுதம்—உயிரகளது உளளத்தில் உறைந்து அவர் களுக்கு நல்லனவே செய்பவன. அந்தர்யாமி.

அண்டம் அகட்டினுள் உரு: அகடு—வயிறு அண்டங் களைத் தனது வயிற்றுள் ஒடுக்கவல்லவை. பஹிர்வ்யாப்தி; யாவும் தன்னுள் அடங்குமாறு பரந்திருத்தல். இவை இரண்டா லும் நாராயணன எனபது.

துவளா—வாடாத. சொல், பொருள், சுவை, பயன், மறைகள், கலைகள் யாவும் நீ.

11, 12 உறையும் திருப்பதியின மேன்மை. விண் தனில்—பரம பதத்தினும் வள்ளால்!—யாவரும் எளிதில் வணங்கிப் பயன்பெறுமாறு உறைபவனே!

14—24. பேரழகு. உரு எழில்—வடிவும் அழகும். நுகரினும்—இனிக்க இனிக்க மேன்மேலும் பெருகும் ஆசையால் நெடுநேரம் அனுபவித்தாலும். பன்ன அரிது—விவரிக்க இயலாதது.

திருவடிகள்: பதும மலர்மிசை மனனும்—பதும மலரின் அழகை ஒடுக்கி, அதன்மேல் அழகுடன் விளங்குகின்றன இவை

மின்னுபன் மணிநிரை மேலென மிளிர்தர
இதழென விரிதரு விரல்தனி லொளிர்நகம்
புதமெழு மதியினும் பொலியநின் விரல்வளை
ஆழியின சுடரோ டருகெழுஞ் செக்கர்
மோழை பாய, முளரித் தண்டெனக்
கணைக்கா லிணையும், களிற்றின் கரமென
இணைதரு மூருவும், இளைத்தநுண் ணிடையும்
பீதக வுடையும் பொருந்துபொற் கச்சும
சீதக் கடலெனத் திரண்டதோர் மணியென
விளங்கு மேனியி னெழில்மா கடலில்

---

கழல்கள்: மணிகளின நிரைகள் மின்னலைப் போல் ஒளிர்வன.

திருவடிகளில் விரல்கள். தாமரையின் இதழ்போல் விரிந்துள்ளன.

நகங்கள்: புதம் எழு. மதி—மேகத்தினிடையே விளங்குகிற புதம்-அமபுதம். மதியினும் பொலிய—மதியைக் காட்டிலும் எழில் மிக்கு விளங்க.

திருவடி விரலகளில் அருகாழி (மோதிரம்) யின சுடர்: அருகு எழும் செக்கர்—விரல்களினிடையே வாயந்துள்ள சிவப்பு. மோழை பாய—ஒளி வெள்ளமாகப பாய

கணைக்கால்: தாமரைத் தண்டு போனறது.

ஊரு—தொடை. களிற்றின் கரம் என—யானையின துதிக்கை போல்.

பீதகவுடை—பொன்னிறமான உடை. ''செவ்வரத்த வுடையாடை'' என்றார் திருவங்கை யாழ்வார். பொற்கச்சு—அரைப்பட்டிகை; ஆடையினமேல் அணிவது ''சிவ்விளிகைக் கச்சு'' என்றார் திருமங்கை யாழ்வார்

25 26. திருமேனியில் கொப்பூழ். சீதக்கடல். குளிர்நத நீருடைய திருமேனி சுடல் போலும், மணிபோலும் பார்ப்பதற்கு அழகாக இருப்பது குறிப்பு.

திருமேனியின் எழில் பெரிய கடல்போல் விளங்குவது. இந்தக் கடலிலுள்ள சுழி போன்றது கொப்பூழ். இலஞ்சி—கொப்பூழ்

இலங்குஞ் சுழிபோ லிலஞ்சி தானும்
கோவைச் செல்வாய்க் குயில்வாழ மார்பில்
பாவு நீலமும் பரவுபொற் சுடரும்
வரையினில் விரைதரும் வாரிபோ லாரமும்
திருமறு கவுத்துவத் தோடுபூ ணூலும்
கமுகிளங் கனறின கழுத்தெனக் கழுத்தும்
சமைதனிக் கற்பகப் பணையெனத் தகைசால்
ஒருநாற் புயமும், ஒளிமணிக் குழையும்
மருவுநல் மோவாய் மழக்க போலமும்
பவள வாயும் பனனரு நகையும்
துவளுங் கற்பகக் கொடியென நாசியும்

---

திருமார்பு: பெரிய பிராட்டியாருக் கிருப்பிடம். கோவை.. குயில்—பெரிய பிராட்டியார், கோவைக் கனிபோல் சிவந்த வாயும், குயிலின் குரல்போல் இனிய குரலும் வாய்ந்தவள்.

பாவு நீலம், பரவும் பொற்சுடர்: திருமேனியின நீல நிறத்திற் பிராட்டியின நிறம் பொனமயமானது பரவ.

திருமார்பில் முத்தாரங்கள்: வரையில்—மலையில். விரைதரும்—விரைந்து பாயகினற வாரி—அருவி ஆரம்—முத்தாரங்கள்.

ஆரங்களோடு விளங்குவன· திருமறு, கவுத்துவ மணி, பொற்பூணூல்.

கழுத்து—இளங் கமுகுக் கனறின் கழுத்து போனறுது.

திருக்கரங்கள் நான்கு : சமை தனி கற்பகப் பணை என—பொருந்தியனவாய் ஒப்பற்ற கற்பகக் கிளைகள் போல பெருமை வாய்ந்தன. 'கற்பகக் காவன நற்பல தோளற்கு' (நம்மாழ்வார்).

செவிகளில் குழைகள்: ஒளி மணிக் குழை. ''மின்னுமா மணிமகர குணடலங்கள் வில் வீசும.''

மழக்கபோலம—இளமையாற் சிறந்த கனனங்கள். ''மழவுங் குழவும் இளமைப் பொருள'' (தொல்)

பன்னரு நகை—விவரிக்க இயலாதவாறு இனிய புன்னகை.
நாசி: துவளுங் கற்பகக் கொடி.

காதள வணவு கமலக் கண்களும்
மேதகு சிலையென மேலொளிர் புருவமும்
மானமதத திலகம் வனைதரு நுதலும்
வானமிசை வாழுநர் தமக்கும மனனெனக்
காட்டும மணிமுடிக கதிரும், குஞ்சியும்
வாட்டமில் மொழியார் வானதனித் தேவரும்
இவவெழில் தன்னி னிறையெனுஞ
செவ்வே சாற்றுதல செய்த லரிதென

## 53. எண்சீராசிரிய விருத்தம

குறம

செய்யகண் மணியனாய்! சீரெழுங் கணபுரஞ
சேர்குறப் பாவையான், சீருறப் பாவையே
செய்யநற் பணணிலே சாற்றுவல் கண்ணனைச்
சேரவன முன்னிய காரிகை யனறியே

---

கண்கள்: காதுவரையில் பரந்துள்ளன: "நீண்ட அப்பெரியவாய கண்கள் '

புருவம்: மேதகு சிலை—பெருமை வாய்நத வில்லைப் போனறது.

நுதல்: நெற்றி, அதில் திலகம் கஸ்தூரியாலானது. மானமதம்—கஸ்தூரி.

மணிமுடி: வானில் வாழும நித்யசூரிகளுக்கும் இவன் அதிபன எனபது காட்டும். கதிர்—ஒளி (மணிகளின்). குஞ்சி—முன நெற்றி மயிர்.

42-44. திருமேனி எழிலை நித்யசூரிகளும் ஓரளவாவது அறிநது உரைக்க இயலாது. இறை—சிறிதளவு. என்: வியப்பிற்கு சிறந்த முடிவு.

53 இவ்வாறு தலைவனுடை ஒப்புயர்வற்ற அழகினை நினைத்து வாடுந் தலைவியைக் கணடு, குறத்தி ஒருத்தி குறி சொல்லியது: இவர் உனமுன நண்ணுவர், இது திணணம்.

செய்ய கண்மணி! அனாய்!—அழகிய கண்ணின மணி போனறவளே! சீர் பாவை யான—திருக்கண்ணபுரத்தில் வாழுங் குறச் சிறுமி பாவை சிறப்பு உற பாடுவேன். சுவை யடர்ந்த பாடல்களைப் பண்ணிலே பாடுவேன். பாவை திருப்பாவை என்னுமாம்.

செய்யவொண் டுளவிலே தோனறிவா ளிளமுலை
சேர்பெருந் தேவினைக் கூறினங் குறியிலே
செய்யநற் பண்பினர் சேருவர் திண்ணமே
செந்நெலுஞ் சேலையு மென்முனே வையமே!

## 54. மருட்பா

கைக்கிளை

வையணை வேலென வாய்ந்தவொண் கண்ணினள்
மையணை கூந்தலள் மாழைமான — செய்யணை
கண்ண புரந்தொழுங் காரிகை
எண்ணி லணங்கில ளிமைத்திவண் வைகுமே.

---

இவள் குறி கூறியது பலித்ததற்குச் சான்றுகள். கண்ணனை...காரிகை—ருக்குமணிப் பிராட்டி கண்ணனோடு கூடுவது சொனனேன். காரிகை—அழகிய பெண். செய்ய . இளமுலை—ஆண்டாள். துளசிச் செடியினிடை அவதரித்தவள். சேர் பெரும் தேவு—ஸ்ரீரங்கநாதன்.

உன தலைவரும் சேருவர் செய்ய நல் பண்பினர்—சிறந்த தோர் இயல்புடைய தலைவர்.

நீ எனக்குச் செய்யவேண்டியது. அமே—அம்மே! செந்நெல், சேலை இவை வை; முனே—முனனே.

கூறினம்: தனித் தனமைப் பனமை வினமுற்று. கூறினம்: இல்வாறு குறிசொல்வ வல்ல நாங்கள் சொனனோம் என்றுமாம்.

''செய்ய'' என்ற சொல் பன்முறை ஒரே பொருளில் வந்தது, சொற்பொருள் பினவரு நிலையணி.

54. தலைலி இமைத்து நிற்பதைப் பார்த்து, அவளது அழகை எடுத்துக் கூறி, அவள் கண் இமைப்பதால் தெய்வப் பெண் அல்லள் எனறு தேறுவது.

கண்: வை அணை வேல் என—கூர்ந்த வேலைப் போல' ''வையே கூர்மை ''

கூந்தல்: கறுத்தது மை அணை—மைபோல் கறுத்து.

மாழை மான- அழகிய மானபோனறவள்.

செய் அணை—வயல் சூழ்நத

எண்ணில்: ஆராய்நதால். தேறுவது: அணங்கு இலள். அணங்கு—தெய்வப் பெண். இவள் இவண் இமைத்து வைகும் ஆதலால் தேறுவது: அணங்கு இவள்

இச்செய்யுள் துணிவு பற்றிய ஆண்பாற் கூற்றுக் கைக்கிளை.

## 55. பதினான்குசீராசிரிய விருத்தம்

### சித்து

வைநு திச்சுட ராழி யேந்திய
சௌரி சுந்தரர் தாளிலே
வைத்த பத்தியிற் பெற்ற சித்திது
வந்து நின்றிவை காண்மினோ
கையு யர்த்தெழு கடக நற்கரி
சொனன வாரண மாக்குவன்
கையெ முப்பிடு மளகை யம்பரில்
கடிகை யாளரி காடடுவன்

---

55. சௌரிப் பெருமானது திருவடிகளில் வைத்த பக்தியாலே சித்தன (ரசவாதி) ஒருவன தான் பெற்றுள்ள வித்தையின தரத்தை விவரிப்பது.

வை நுதி சுடர்-ஆழி— கூரிய முனையும ஒளியும வாய்ந்த சக்கரம். பத்தியில்- பகதியாலே. சித்து சித்த வித்தை.

செய்வது : கரியைத் தங்க மயமான யானையாக மாற்றுவேன். கை உயர்த்து எழும கடகம் நல் கரி—கையிலே உயர்த்திய கடாவில் (பெட்டியில்) உள்ள கரியை. சொனன— ஸ்வர்ணமயமான, தங்க மயமான. வாரணம—யானை.

உட பொருள் : கை (துதிக்கை) உயர்த்து எழு (எழுகினற) கடக நல் கரி—யானைகளுள் சிறந்த யானை கடகம்—யானைக் கூட்டம். கரி—கரத்தையுடையது, யானை சொனன— சொல்லியவாறு.

வாரணம்—யானை.

இது அரிய தொன்றனறு. யானை ஒன்றினை யானையாக மாற்றுவதென்பதிலலை.

பினனும் செய்வது : வடக்கு நோக்குவீர்; ஒரு சிங்கத்தைக் காட்டுவேன அளகை அம்பர்—குபேரனது அளகாபுரியுள்ள வட திசை.

கை எழுப்பிடும்—கையை உயர்த்திப் பாருங்கள். கடிகை— கடிகைப் போதில். ஆளரி—காட்டுவன ஆள் அரி—அத்திசையி லுள்ள சிங்கம். கடிகை—நாழிகை.

உடபொருள் : கையை எடுத்துத் தொழுவீர். கடிகை ஆள் அரி—கடிகை என்ற திவ்ய தேசத்தில உறையும் நரசிங்க மூர்த்தியைக் காட்டுவேன. இதுவும வித்தையாலன்று; வடக்கில் சென்று வணங்கினால் இப்பெருமானைக் காணலாம்.

பைய டர்கறை நாக மாடக
மாகப் புளளுட லேற்றுவன்
பளிங்கு பித்தளை வங்க மேலுற
வெள்ளி வேங்கையு மாகுவன்
கைந்நி றைத்திடு மனன முனனிடும்
வெணணி றத்தயி ருறுகாய்
காட்டு வனதனிப் பரி வேதியும்
மாய மூலிகை வித்துமே.

---

பினனும் செய்வது : அழுக்கடைந்துள்ள துத்த நாகத்தைச் சிறந்த பொன்னாக்குவேன் பை அடர் கறை நாகம்—பையிலே உள்ள மாசு பொருந்திய துத்தநாகம். ஆடகம்—உயர்ந்த மாற்றுப் பொன. ஆடகம் ஆகபுள் உடல் ஏற்றுவன்—சிறந்த பொனனாக மாற்றிக் கருடனது மேனியிலே காட்டுவேன.

உட்பொருள் : பை (படம்) அடர், கறை, (விடம்). நாகம்—பாம்பு. இதை புள் உடல்—கருடனது மேனியில் ஆடு அகமாக—இது ஆடும் இடமாக, ஏறறுவன்.

நாகத்தைக் கருடனது மேனியில ஏற்றுவது, இயல்பாக வுள்ளது, சித்தால் செய்வதனறு

பினனும் செய்வது: பளிங்கு, பித்தளை இவற்றைக் கொண்டு பெரிய வெள்ளி மயமான வேங்கைப் புலியாக்குவேன. வங்கம் மேலுற : கப்பலிலும் பெரியதான.

உட்பொருள் . வங்கம்—கப்பல், தாமிரம். வேங்கை—பொன். பளிங்கு, பித்தளை, வங்கம வெள்ளி, வேஙகை இவற்றை இவை மயமாகவே ஆக்குவேன. மாசு பொருநதிய பளிங்கு, பித்தளை, தாமிரம், பொன இவற்றை, பளிங்கு பளிங்காகவே, பித்தளை பிததளையாகவே தாமிரம் தாமிர மாகவே, பொன் பொனனாகவே ஒளி கொள்ளுமாறு செய்வேன, நன்கு தேயத்து மேல உற சிறந்ததாக, மாசு நீங்கி

நான வேணடுவன : முன இடும—முதலிலே வைப்பீர், அன்னம (சோறு), வெண் நிறத் தயிர், ஊறுகாய். தான் உங்களுக்குக் காட்டுவன : தனிப் பரிசவேதி—தொடுவன வறஙறப் பொன்னாக்க வலல குளிகை. மாய மூலிகை விசித்திர மான சக்தி வாய்ந்த மூலிகைகள். வித்து—மாயங்கள் செய்யவல்ல விதை.

## 56. வஞ்சித் துறை

வித்ததா யுயிர்களெல்லாம்
அத்தனாகு சௌரீசன
சித்தமென புகுந்தனனால
நித்தமுந் தித்திக்கவே.

## 57. இருவிகற்ப நேரிசை வெண்பா

அறுசுவை

தித்திக்கு மக்காரத் தீங்கனியாகு சௌரீசன
பத்தி பழுத்தார் பவங்கைக்கும பித்தன
உவர்க்கடல் வணணன புளிங்குடியா மோர்வீர்
துவர்க்கு மதரத்தான தோய்வு

---

56. உயிர்களுக்கெலலாம் காரணமாகிய பெருமான் என் சித்தத்திற் புகுநதான, நான நாளதோறும இனபமுடன் அனுபவிககு வித்து · ''முதல்தனி வித்தேயோ முழு மூவுலகுக் கெலலாம்'' (நமமாழவார). அத்தன—தந்தை; எனக்கு இதத்தையே நடத்துபவன். புகுந்தனன—தானே புகுநதான்; எனக்கு இதுை செய்வதற்காக.

சித்தம தித்திக்க—தனனுடைய சிததமும் எனனுடைய சித்தமும அவனுககு இனபம, நமககு உதவுவதே.

57 உயிர்களுக்கெலலாம தநதையானவன, யாவகைச் சுவையுமானவான. ''ஸர்வரஸ:''

ஆறு வகைச சுவைகள இசசெய்யுளில் தோனறுவது உணர்க. தித்திப்பு, கைப்பு, உவர்ப்பு, புளிப்பு, துவர்ப்பு, காரம்

தித்திக்கும் அக்காரத் தீங்கனி· இதனுள் தோன்றுவன: திததிப்பு, காரம். தீஙகனி—இனிமையா ன கனி. அக்காரம—கரும்பு, சர்க்கரை, கற்கணடு அக்காரத் தீங்கனி அக்காரமே (தித்திப்பே) ஒரு மரமாகி, அதிலே பழுதத கனியானால, அது தரும இனிமைபோல் இனிமை வாயநதவன பெருமான். திருக் கடிகையில பெருமான அககாரக் கனி என்ற திருநாமத்துடன் விளஙகுகிறான. ''கணபுரத் தென கனியே!'' என்றார் திருமங்கையாழ்வார்

இக்கனி செய்வது : பத்தி பழுத்தார் பவம் கைக்கும் — முதிர்த்த பக்தி வாய்ந்த அடியார்களது பிறவியைப் போக்கும். தித்திக்கும் கனி கைக்குமா! இககனி பிறவிக்கு மருந்துமாகும். துவர்க்கும் சிவப்புடைய.

## 58. எண்சீராசிரிய விருத்தம்

தோய்முகிற் பூம்பொழில் சூழ்தருங் கணபுரம்
தோய்பெரு மான்தனி வானவர் கோனவன்
பாய்தரு மாறுதான கரவிரி யாகுமே
பாங்கமர் பூந்தட மோங்குதூ நீரெலாம்
வேய்தரு வீறுடை நித்யபுட் கரிணியே
மனனுநர் விண்ணவர் தம்மினும் மேலவர்
வாய்பெரும் புகழதோ வானதிரு மந்திரம்
வாளினாற் பெற்றவன பாவினா லுற்றதே.

---

துவர்க்கும அதரத்தான—சிவந்த வாயுடையவன்; ''பவள வாய்.'' தோய்வு—உறைவிடம். உவர் கடல் வண்ணன்—உவர்ப்பு நீர் அடர்ந்த கடலின் வண்ணம் வாய்ந்தவன். வண்ணம்—நிறம், இயல்பு. துவர்க்கும் அதரத்தான் தோய்வு புளிங்குடி!

58 திருக்கண்ணபுரத்தின் மேனமைக்குக் காரணங்கள்: பெருமான் நித்திய சூரிகளின் தலைவன்; பாயும் ஆறு காவிரி; புட்கரிணி நித்ய புட்கரிணி, புகழ் திருமங்கையாழ்வாரது பாடல்களால். இதில வாழ்வோர் நித்ய சூரிகளிலும் மேம் பட்டவர்.

முகில தோய் பூம்பொழில்... தோய் பெருமான்—மேக பதத்தளவும் ஓங்கி வளர்ந்து மரங்கள் கொண்ட பொழில் சூழும் திருக்கண்ணபுரத்தில் உறையும் பெருமாள். தனி வானவர் கோன—நித்திய சூரிகளின் தலைவன் பாங்கு அமர்—அழகு வாய்ந்த பூமதடம் -தெண்ணீர் அடர்ந்த திருககுளம. ஓங்கு தூ நீர் எலாம்: புனிதமான தீர்த்தங்கள் பலவும் தை மாதம் முதல் நாள் எல்லாத் தீர்த்நங்களும் இதில் தோயந்து மீண்டும் புனிதமா கினறன எனபது குறிபபு. நித்யபுட்கரிணி—இபபுட்கரிணியில் இரவு, பகல் என்ற வரையறை யில்லாமல் நீராடலாம். தீர்த்தங் களில இரவில நீராடலாகாது. பெருமானை எக்காலத்திலும் வணங்கலாம் எனபதுபோல், இத்தடத்தில் எப்போதும் நீராடலாம் வேய்தரு—பொருந்திய. வீறு—பெருமை.

மன்னுநர்... மேலவர்— இங்கு வாழ்வோர் நித்ய சூரி களினும் சிறந்தவர்.

பெருமைக்கு முக்கியமான காரணம்; வான் திருமந்திரம்... பெற்றதே—சிறந்த திருமந்திரத்தைத் தனது வாள்வலியால் பெற்ற திருமங்கையாழ்வார் அருளிய பாடல்களாலே.

## 59. பதினான்குசீராசிரிய விருத்தம்

இந்திரசாலம

உற்றவிரு சுடர்தம்மை மறைத்திடுவன் மினமினியும்
விரிகதிராத் திகழச செயவன
ஓதமடர நீரதனை யொடுக்கியொரு கரமமைப்பன்
ஓங்கலதைக் கடுக மைப்பன்
பற்றியொரு துரும்பதனைத் தூணாக மாற்றிடுவன்
திசையெட்டுஞ சுழலச் செய்வன

---

59. இந்திர சால வித்தை வல்லா னொருவன் தனது பேராற்றலை விவரித்து, அவ்வாறான ஆற்றலால கண்ணபுரத் தானையும் நேரிற் காட்டுவதாகக் கூறுவது. செய்ய இயலாத யாவும் தான எளிதிற செய்வதாகக கூறுவது.

முதலில் செய்வது. இறைவனது ஆணைப்படி இயங்குஞ் சநதிர சூரியர்களை மறைப்பது. பெருமான் சூரியனை மறைத்தான்; நான சந்திரனையும் மறைப்பேன. இது எங்ஙனே எனனில்: நமது முகத்தில் உள்ளன: இரண்டு சுடர்கள் போனற கணகள் இவற்றை என் கையால் மறைப்பேன இது எளிதிற் செய்வது.

பின்னும். மினமினிப் பூசசியைச சூரியன்போல் திகழச் செய்வேன். எங்ஙனம? இப்பூச்சிகள பல, இவற்றின ஒளி சூரியனது ஒளிபோல் எங்கும் அடரும. இதுவும் எளிதே.

மேலும்: கடல் நீரைக் கையில் அடக்குவேன. எங்ஙன் எனில, ஒரு கரத்தை ஒடுக்கி அதிற் கடல்நீரை ஏற்பேன். இதுவும எளிதே. ஓதம உறை நீர்—அலைகள அடர்ந்த கடல் நீர்.

மேலும்: மலையைக் கடுகில் அமைப்பேன. ஓங்கல்—மலை. ஓங்கு அல் அதை—ஓங்குங் கருநிறத்தை. கடுகு கறுப்பானது. கடுகிலே கறுப்பு நிறநதை அடர்த்துக் காட்டுவதும் எளிது. ஓங்கலதை எனபதை ஓங்கல அதை எனறும், ஓங்கு அல் அதை எனறும இருவகையாகப் பிரிககலாம்.

அனறியும் ஒரு துரும்பைத தூணாக மாற்றுவேன். எங்ஙனம்? சிறு துரும்பும் இறைவனது ஆணையாலன்றி அசையாது. இத்தனமை தூணைப்போல் நிலையுள்ளது.

பாரெங்கு மழலோங்கச செய்யவலன மெய்யகலு
மாவிகளும தோன்றச் செய்லன
நற்றவர்கள் சூழ்ந்தெங்கும் வாழ்த்தவுயர் விண்மிசையி
லார்ந்ததனிச் சுடரும் மண்ணில்
நாமுய்யக் கொண்டபல பிறவிகளும் நமுவாமே
கண்ணுதலை, மலரில் தோனற

---

பெருமான துரும்பிலும உறைவான "நிதியினைப் பவளத் தூணை" என்று, இவனைத் தூணாகவும் பேசுவர். ஆதலால் துரும்பைத் தூணாக்குவதும் எளிதாகும்.

மேலும், திசை எடடும் சுழலச செய்வன்: பூமி சுழல்வதால் திசைகளும் சுழல்வன. ஆதலால் திசைகள் சுழலச் செய்வதும் எளிதாம்.

அனறியும், உடலை விடடு நீங்கும் ஆவிகள் மீண்டும் தோனறுமாறு செய்வேன. உடலை விடடு நீங்கும் ஆவிகள் மீணடும வேறு உடல்களில் சேர்வன ஆதலால் இந்திரசால வித்தையால் இது நேருவதில்லை

மேலும் செயவது: பரமபதத்தி லுறையும் பெருமானை நீங்கள காணும்படி செய்வேன். நல தவர்கள்—பெருமானுக்குத் தொண்டு செய்வதே தவமாகக் கொளபவர்; நித்திய சூரிகளும்' முக்தர்களும். எங்கும் சூழநது வாழத்த, உயர் விண்மிசையில் ஆரந்த தனிச் சுடர்—ஒளிமயமான பரமபதத்தையும் தனது ஒளியால் மஙகச செய்யும ஒளி வாயந்த பெருமான இப் பெருமானது ஒளியால பரமபதத்தின் ஒளி மினமினி போலாகும். மண்ணில்—இவவுலகில, இதன தணமை பாராது இவன பிறநதமை குறிபபு. இப்பிறவிக்குக் காரணம: இவன் நமமை உய்விப்பதற்காக. பல பிறவிகள் — அவதாரங்கள் எண் கடந்தவை; "பிறப்பில், பல்பிறவிப் பெருமான." நமுவாமே — யாவற்றையும்.

இவனது பெருமை. தேவர்களையும் தனது வயிற்றுள் வைத்துக் காததமையால. கண்ணுதல—நெற்றிக கண்ணன, சிவபெருமான் கணணுதலை—சிவெபருமானுக்கு அந்தர்யாமி யாகியஇபபெருமானை.

லுற்றவனை வாசவனை யண்டபகி ரண்டமிவை
    தம்மைமத்தன வயிற்றுள வைத்த
உத்தமனைக் கண்ணபுரக் கார்முகிலை, மறையாக
    ஞாயிற்றைக் காண்பீர் நீரே.

## 60. அறுசீராசிரிய விருத்தம்

ஞாயி றுறைவார் முகந்திங்கள்
    நற்செல் வாயோ நற்பவளம்
வாயும் லணமோ வம்புதமாம்
    வணமே, வலியார் மாசுணமே

---

மலரில் தோன்றல் உற்றவன—பிரமன. வாசவன- இந்திரன். இவர்களுக்கு இவன அந்தர்யாமி. அண்டம் பகிரண்டம்—இங்குள்ள அண்டங்கள், இவற்றைச் சூழந்துள்ள புறக்கடலுக் கப்பாலுளள அண்டங்கள். வயிற்றுள் வைத்த—பிரளய காலத்தில் பிரமன முதலான தேர்களையும், அண்ட பகிரணடங்களையும் தன வயிற்றுள் ஒடுக்கி வெள்ளம் கொள்ளாதவாறு காத்தான.

உத்தமன—மிக மிகச சிறந்தவன. தனனைக் கருதாது உயிர்களைக் காபபதே தனது பேறாகக் கொண்டவன். மறையாத ஞாயிறு: "பகற் கண்டேன—நாரணனைக் கணடேன" எனறவாறு, ஞான உதயமான பின்பு, அஸதமிக்காக சூரியனான பெருமானைக் காணலாம்

உத்தமன, ஞாயிறு, முகில்: ஒரு பொருள் குறிக்கும் பல சொறகள. பிரமன், சிவன், இந்திரன இவர்களுக்குப் பெருமான் அந்தராத்மாவாதல் குறிப்பு; இவனது அவதாரங்களை அர்ச்சை யில் காணலாகும்; ஆதலால் காட்டுவதாகத் துணிந்து கூறலாம்.

60. "எதிர் நிகழ் கழிவுமாய்" நிற்கும் சௌரிப் பெருமாள் வாரத்தின நாள்களாக விளங்குகிறான.

ஞாயிறு உறைவான்—ஞாயிற்றுள் உறைவான்: ஏழனுருபு தொக்கது இவனது முகம் திங்கள். திங்கள்—சந்திரன்.

வீய முனிந்த வியாழமதே
வெள்ளி யாகும் வணநகையே
காயும் நரகுக் கோசனி
கண்ண புரத்தார் கண்டீரே.

## 61. கட்டளைக் கலித்துறை

கணண புரத்தார் துளவே கருதுங் கருமபிவடன்
வண்ண மழிந்தாள், குயில்பூ வணையாலை, மாமணிசேர்

---

நல் செவ்வாய் நல் பவளம்—மிகச் சிவந்த வாய், குற்றமற்ற பவளம்.

வாயும் வணம். மேனிக்கு வாய்ந்த நிறம். அம்புதம்—மேகம். அம்புதம் ஆம் வணம்—மேகத்தின வண்ணம் ஆகும்.

வலி ஆர் மாசுணம் அது வீய முனிந்த இவர்: மாசுணம்—மலைப்பாம்பு, அகாஸுரன கிருஷ்ணாவதாரத்தில் இவர் மலைப்பாம்பு வடிவு கொணட அகாஸுரனை மாய்த்தார். வீய—முடியுமாறு முனிந்த—கோபஙகொணட வியாழம்—வேழம், யானை; அல்லது வியாழன எனற சுரகுரு.

இவரது வண நகை வெள்ளி ஆகும்—இவரது அழகிய முறுவல் வெள்ளிமயம்; வெள்ளிபோல் வெண்மை வாய்ந்தது. வணம்—வண்ணம்; அழகு, சிறப்பு.

இவர் கொடிய நரகுக்கு அசனி. காயும் நரகு—கொடுமை வாய்ந்த பிறவிகள். இவறறுக்கு அசனி; இவற்றை ஒழிக்கும் வச்சிராயுதம். ஒர் அசனி—ஒப்பற்ற வச்சிராயுதம்; பல பிறவி களை ஒருங்கே ஒழிப்பதால். நரகு—பிறவியை நரகம் எனபது.

ஞாயிறு தொடங்கி சனி ஈறாகக் கிழமைகளின பெயர்கள் அமைந்துள்ளன. கண்டீர் தேற்ற முணர்த்திற்று.

61. தாய் சொல்லும் பாசுரம். தனது மகள் தனக்குக் கரும்பே போன்றவள்; கரும்பே போலப் பலகையாலும் துனபமுறுகிறாள்.

இத்தலைவி பெறக் கருதுவது: கண்ணபுரததார் சூடிய துளவம், வனமாலை.

கரும்பாகிய இவள் தன் வண்ணம் அழிந்தாள். வண்ணம்—இயல்பு. அழிந்தது. கரும்பு சாறாயிற்று.

வண்ணத்தோட் டினபால் வடிகண்ணீ ராலை வடிபிரசம்
எண்ணில் நுதலார் குருவோ பிதுங்கு மெழில்முத்தமே.

## 62. எண்சீராசிரிய விருத்தம்

**தூது**

முத்தமிழின் முருகறிவார் மொய்க்குழுசீர்க் கண்ண
 புரமுறைவார் மொய்யகலந் தோய்தரவே யெனறன்
சித்தமிக நாடுமவர் வந்திலரால், வெண்ணற்
 சிறையீர்நும் பங்கயத்தார் தந்நாவைப் பாரீர்

---

வண்ணம்—நிறம். இயல்பான நிறம் மாறிப் பயலை பூத்தது.

இவள் துயிலும் பூ அணை. இவள் படுத்துறங்குவதற்காக அமைந்த பாயல், மலரால் அமைந்த படுக்கை. ஆலை—கரும்பாலை யாயிற்று. இவளது உடம்பைப் பிழிந்து வாட்டி விடுகினறது.

இவள் அணிந்துள்ள தோட்டின்பால் கண்ணீர் வடிகின்றது. மாமணி சேர் வண்ண(ம்) தோடு—சிறந்த மணிகள் அமைந்து ஒளிமிக்க தோடு இவற்றின்பால் தோய்வது கண்ணீர். காதளவும் ஓடிய கண் என்பது பெறப்பட்டது. ஆலை வடி பிரசம்—கரும்பாலையிலிருந்து வடிகின்ற சாற்று வெள்ளம்.

நெற்றியில் காண்பது: வேர்வைக் குரு. எண்ணில் ஆராய்ந் தால், வேர்க்குரு, பிதுஙகும் முத்தம்—கரும்பிலிருந்து உதிரும் முத்தங்கள். முத்துப்படும் கரும்பு உத்தமமாவதுபோல், இவள் பெண்களுள் உத்தமை; "நாரீணா முத்தமா வதூ:" (வான்மீகி.)

கரும்பு போன்ற இவள் பெருமானது துளவத் தாரை நாடிக் கரும்புபோல் பாடுபடுவதோ? உடல் குலைந்து, ஆயாசத்தால் நீராய் உருகுகிறது; முகத்தில் வேர்வை முத்துக்கள்போல் அரும்புகிறது.

62. தலைவி, தனது நிலையை அன்னப பறவைகளிடம் கூறித் தலைவனிடத்துத் தூதாக அனுப்புவது. தலைவன் என்னிடம் நாடாதவாறு, பிரமன் என் தலையில் எழுதி விட்டான் என்று புலம்புவது.

மைத்தமுகில் வணத்தாரு மென்பாலே நாடா
வணமென்றன் சிரமிசையே பொறித்தனரா லந்தோ!
மொய்த்தமலர் நிலையதனை நீத்தவர்பா லேகி
மொழிவீரென நிலையேநும் மியல்பொழிவீ ரினநே.

## 63. பதினான்குசீராசிரிய விருத்தம்

இரங்கல

பொழிமதக் களிறும் மல்லரும் பொல்லாக்
கஞ்சனும் மாய்வுற நடந்தீர்
புள்ளல கிறுத்தீர் கனநினைக் குணிலாக்
கனியினஞ் சிதைவுற வெறிந்தீர்

---

என தலைவர் முத்தமிழின் உறைவார். "கற்றார்சேர் கண்ணபுரம்" எனபது நோக்கு. முருகு—தேன, அழகு எனது விருப்பம்; அவரது மொய் அகலம் தோய்தல்: மொய் அகலம்—வலிமை வாய்ந்த மார்பு. "வரையாகம்." என சித்தம் மிக நாடும்—அவர் எனனுடைய எணணததில் தோய்ந்திருப்பவர். வந்திலர், ஆல்—லரவிலலை, அந்தோ!

வெண நல் சிறையீர்!—வெணமையாய் அழகிய சிறகு வாய்நத அனனங்களே! நும பங்கயத்தார்—உமது தலைவராகிய பிரமன; உம்முள் ஓர் அன்னத்தை ஊர்தியாகக் கொண்ட பெரியவர்

தம் நாவைப் பாரார்—தமது நாலில் ஒரு பெண்ணைக் கொணடவர். உம்மைப் பார்த்தால இது தெரிநது கொளவார். மறையின பண்கொளளும நாவிலே பெண கொணடார இவர் செயவது விபரீதம் என தலையிலே விபரீதமாகப் பொறித்து விடடார்.

நீஙகள் செயய வேளாடியது மொய்த்த.. நீத்து—தடாகம் முழுதும்அடரநத தாமரை மலர்களில் பொருந்துவதைஎனக்காக நீத்து அவர் பால இன்று உரையீர். பின்னும உமது இயல்பை நீத்து, எனனை என தலைவருடன இணைதது வைப்பீர். இயலபு: பிரிபபது.

நாவிற் பெண்கொள்ளும் பெரியாரும், உமது தொடர்பால், பிரிக்கும் இயல்பு பெற்று, எனனையும் என தலைவரையும் பிரிக்கிறார் போலும்!

மொய்க்கும்—ஸ்ரீவைகுண்டத்திற்போல் அடர்ந்துள்ள.

மழவிடை யேழின் கொம்பிடைப் பொருதீர்
கொம்பனாள் தோளிணை புணர
வானவன் காவில் மரந்தனை நடடீர்
காதலி பாற்பரி வாலே
இழையணி நங்கை யிருகர முயர்த்துத்
''துவரையந் திலகமே காவாய்''
எனறுசோர்ந் தலறத் துகிலினைப் பெருக்கி
மேலவள துயரினை மாய்த்தீர்

---

63. தன்னை யண்டினவரக்கெல்லாம் இறையவன் செய்தன வற்றை எடுத்தோதித் தலைவி, ''நீர் எனபால் வாராதது எங்ஙனம்?'' என்று கேட்கிறாள். கிருஷ்ணாவதாரத்தில் இவன் செய்தன விவரம் பெறுகினறன.

மதம் பொழி களிறு குவலயாபீடம். மல்லர் —முஷ்டிக சாணூரர் —இவர்கள் மாய்வு உற நடந்தீர்—மதுரைக்கு.

புள் அலகு இறுத்தீர்—பகாசுரனுடைய மூக்கைப் பிளந்தீர். கனறினை...கனிமிசை கனறாக வந்த அசுரனைக் கனியாக அமைந்த அசுரன மேல் எறிந்து, இருவரையும் மாய்த்தீர். கனி — விளங்கனி.

நப்பின்னைப் பிராட்டியை அணைவதற்காக நீர் செய்தது: மழவிடை—இளமை வாய்ந்து, வலிமை பெற்ற ரிஷபங்கள்' கொம்பு அனாள் —கொம்பு போல் ஒசியும் இடையுடைய நப்பின்னை.

சத்தியபாமைப் பிராட்டிக்காகச் செய்தது. வானவன் — இந்திரன. மரம்—கற்பகம். ''கற்பகக் காவு கருதிய காதலிக்கு, இப்பொழு தீவனெனறு இந்திரன காவினில்...''(பெரியாழ்வார்). காதலிபால பரிவாலே! இது செய்தது

திரௌபதிக்குச செய்தது. இழை அணி நங்கை—ஆபரணம் அணியும் திரௌபதி இருகரம் உயர்த்தி ; தனது மானத்தைக் காத்துக் கொள்ளப் பயனபடுத்திய இரண்டு கைகளும் உயரத் தூக்கி. துவரையந் திலகமே! காவாய்! 'த்வாரகா நிலய! அசயுத! ரக்ஷ மாம சரணாகதாம்'' என்றாள். இறைவனது திருநாமத்தின் பெருமை: திருநாமத்தை ஓதியதால் அவளுக்குச் சேலை பெருகிற்று. அவன துவாரகையிலிருந்தும் அவனது திருநாமம் அருகிலிருந்ததுபோல் உதவியது.

கழையொடு செந்நெல் கமுகொடு மாவும்
மலிதரு கணபுர மேவும்
தனியனை யீரென் பால்வர வொழிந்தீர்
எனனென வினறுரை வீரே.

## 64. கலிநிலைத் துறை

உரையா யிதுநீ முதல்வா! உரவோ ருளந்தோய்வாய்
விரைவாய் புறமே கருடன் மீதே வியன்வெள்ளத்
திரைமேல் மழவாய்ச் சேர்வா யால்மேல் திருககண்ண
புரந்தோய் பெருமான்! நீயென னெங்கும பொலிவதுவே!

---

மேல்—மேலும், பினனும். அவள் துயரினை மாய்த்தீர்—அவள் விரித்த கூந்தலை முடிப்பதற்காகப பாரதப்போரில தேரூர்நதீர்.

கழை —கரும்பு. கனி அனையீர்!—கனிபோலே யாவர்க்கும இனிமை வாயநதவரே! தனனை நுகராதபோது நையும கனி போலே, மாநதர் தனனை நாடாதபோது நையுந திருவுளங் கொண்டீர். இவவாறான இயல்பு வாயநதும், எனபால வரவு ஒழிநதீர்—என்?—என இனறு உரைவீர்.

64. பெருமான ஒருவனே யாகியும், எங்கும உறைவதன வியப்பு. பெருமானே! இதைக் கூறுவாய். முதல்வா! இது நீ. உரையாய்—யாவர்க்கும முதல்வனான நீ சொல்லாய்; உரைத்தல் நனறு

நீ தோய்வது உரவோர் உள்ளம். உரவோர—அறிஞர், முனிலர். இவ்வாறாகியும புறமே கருடன் மீதே விரைவாய். அதே சமயத்தில் கருடன மீதும் ஊர்ந்து செல்வாய்.

பின்னும், வியன வெள்ளத் திரை மேல்—வியக்குமாறு எங்கு மடரும வெள்ளத்தின அலைகளிலே. திரை—அலை. மழவு— குழநதை. ஆல்மேல்—ஆலிலையில.

திருக்கண்ணபுரம் தோய் பெருமான் : பிரளய காலத்திலும் இத்தலத்தில் இவன் தோய்ந்திருப்பான் என்பர்.

நீ எங்கும் பொலிவது என்! நீ ஒருவனே எல்லாருடைய உள்ளத்தில் உறைந்து கருடன்மீது ஊர்வதுவும, வெள்ளத்தில் ஆலிலையில் துயிலவதுவும், அடியார்களுக்காகத் திருக்கண்ண புரத்தில் தோய்வதுவும் வியப்பாகும.

## 65. கலிவிருத்தம்

### தூது

பொலிபொழில்சூழ கண்ணபுரப் பொனமதிள்தோய் முகில்காள்!
மலிவிரைவாய் மலருறையும் வணடனையார பிரிந்தார்
சிலையதுவோ இவருள்ளம்! சென றிவர்பா லெனறன்
முலைமிசையே மோய்த்துவிளை பொனனையுரைப் பீரே,

## 66. கொச்சகக் கலிப்பா

### தூது

பொனனெயிலசூழ் கண்ணபுரப் பொனனனையா
ரெண்ண மெதோ?
கொனனவிலுஞ சக்கரததார் சொன னவிலார், கொனறையினம்
பொன னவிருஞ சடையார்க்குத் தமமுரமே புகலீநதார்
முன்னிலையில மெய்யுரையீர் மொய்குழலீர்! எனனிலையே.

65 பெருமானோடு புணர்ந்து இனபம் நுகர்ந்த தலைவி, பிரிவாற்றாமையால், தன நிலையைப் பெருமானிடம் கூறுமாறு மேகங்களைத் தூது விடுவது என மூலையின்மேல் படர்ந்துள்ள பயலையை அவனிடங் கூறுவீர், எனகிறாள்.

தோய முகிலகாள்! : நீஙகள் தோய்வதுபோல் அலரும் எனனிடந் தோய்ந்தார், வணடு அனையார் —மலரிற் படிந்து மதுவைப பருகிப் பினபு அமமலரை விட்டு நீங்குவதுபோல் என்னிடம் இன்பம் நுகர்ந்து, எனனை விடடகனறார். விரை மலி வாய்—அடர்ந்த பரிமளம வாய்ந்த.

இவர் உள்ளம சிலை அதுவோ—இவரது உள்ளம், அத்தகைய கலலோ? இவரபால் சென்று உரைப்பீர்: இவரிடம் சென்று என நிலையை உரைப்பீர். பொனனை உரைப்பீர்: பொனனின மாற்றுக் காண்பது உரைகல்லின மீது அதனை உரைத்து அவரது உள்ளமாகிய கல்லில் பயலையின அளவைக் காண உரைக்க வேண்டும். பொன — பயலை

66. தன்னிடம் பரிவுள்ள தோழியரைத் தலைவி, தலைவனிடத்து அனுப்புவது. இயல்பாகக கருணையுள்ள பெருமானிடம் என் நிலையை அறிவிப்பீர், என்கிறாள்.

எயில—மதிள். பொன அனையார் —பொனபோல் யாவராலும் விரும்பப்படும் தலைவர், கொல் நவிலுஞ சக்கரத்தார்— கொல்லுவதே இயல்பாகவுள்ள சக்கரத்தை ஏநதியவர்.

## 67. ஒருவிகற்ப நேரிசை வெண்பா

என்னென பிறவியெலா மெண்ண வலரெவரோ?
இனனும் பிறப்பிக்க வெண்ணாதீர் – மினனுங்கார்
மனனுங் கணபுரம வந்தீர்நா னுய்தற்கே
முனன முளங்கொண் டுகந்து.

## 68. கலித்துறை

இரங்கல

உளமுறை யுயிரனை யவர்கண புரமுறை யுத்தமரென
இளமுலை யழலிக வணைதர யிவணினி யேகுவரோ?
தளமலி தளிமமுந் தழலினுங் கொடிதெழு தண்காலுங்
களமென வுடலடுங் கொடிதடு நமனினுங் கங்குலிதே

---

இவரது கருணை : சங்கரற்கும் தனது உடலில் ஒரு கூறு அளித்தவர். இணர்—கொத்து. பொன அரிரும் சடையார்: கொன்றை மலர்களாலே. உரம—மார்பு. ஆனால் சொல நவிலார்—வருவதாக ஒரு சொல சொவ்வ மாட்டார் நீங்கள் செய்வது. என நிலையை மெய் உரையீர்—முழுதும் எடுத்துக்கூற வேண்டும்

67. பெருமான் ''வைகுந்தங் கொடுக்கும் பிரான்'' ஆதலால் பிறவிகளை நீக்கியருளுமாறு அவனை வேண்டுவது.

என பிறவிகள் எண்ணவலர் எவர்? என: அசை. மினனுங் கார் மனனுங் கணபுரம—மினனலோடு மேகம சேரும். கண்ணபுரம வந்தீர், நான உயதற்கே, முனனம் உகந்து உளம் கொண்டு எனக்காக முனனவே வந்தீர், எனக்கு அருளுவதே பேறாகக் கொணடு. உளம்— உள்ளம.

68. தோழியர் தூது சென்றும் பயனில்லை. தென்றலாலும் இரவாலும் வருந்தும் தலைவியின இரங்கற் செய்யுள்.

உளம் உறை.. உத்தமர்—என உள்ளத்துள் உறைந்து, எனக்கு உயிர் போன்ற உத்தமர். உத்தமர்—உதவுவதே தமக்குப் பேறாகக் கொள்பவர்; தம்மைக கருதாமல் உதவுவதே இயல்பாக வாய்ந்தவர் இனி இவண் ஏகுவரோ இவ்விடத்தில் இனி எனக்காக வருவாரோ? இளமுலை அழல் இக அணைதர— எனது இளமுலைகளில் பரவும் அழல நீங்குமாறு என்னை அணைப்பதற்காக.

## 69. வஞ்சிப்பா

கொடிகணைவுறக் கோடிலைதப
மடுநிலைபுனல் வல்லழல்கொளக்
குடிகணம்புவி சிரங்கலிழதரக்
கடிநகர்தனைக் கடிதொழிந்துபொற்
கொடியோடுமின வலுமுடன்வரக்
கொடுவனம்படர் கோமகன்றனித்
தலைவன
பொலியுங் கணண புரமே
நலியும வினையை நைய வலதே.

---

இவர வராததால், எனது துயர் தளம் மலி தளிமம்—பூவிதழ்கள் வேய்ந்த படுக்கை. தழலிலுங் கொடிது. உயிரை வைத்து உள்ளத்தை எரிக்கும.

எமு தண்கால—வீசுங் குளிர்காற்று. களம் என உடல் அடும் -விடத்தினுங் கொடிதாய் உடலை வாடடும். ஆதலால் இராபபோது, கொடிது. கங்குல் (இராப்போது) நமனிலும் கொடிதுஅடும்.

எமனின பணியைக் கற்ற படுக்கை, தண்கால், இரவு இவை ஒவ்வொனறும் யமனினும் வலிமை வாய்ந்ததே!

69 இராமபிரான காட்டிற்குச செலலும்போது நிகழ்ந்தது. சேதனங்கள், அசேதனங்கள் என்ற பாகுபாடில்லாமல் வருத்தமே நிலவியது.

முதல் இரணடு வரிகள் அசேதனங்கள் தங்கள் வருத்தத்தைக் காட்டிய வகை கொடிகள் நைவுற -கொடிகள் யாவும் வாடி நைந்தன கோடு இலை தப—துயரந தாங்காமல் மரங்கள் இலைகளை உதிர்த்தன மடுநிலை புனல்—மடுக்களில நிலைத்திருந்த தண்ணீரும். வல் அழல கொள—மேலிருந்து அடிவரையில் முழு ஆழத்திலும் கொடிய தொரு தாபம் கொண்டது, எவரும் அணுக இயலாதவாறு. கொடிகள் நைவு உற, கோடு இலைதப, மடு நிலை புனல், வல் அழல் கொள (கொளள). வல அழல—தாங்க முடியாத வெப்பம், சீதளம் மாறி வெப்பமே விஞசியது.

பெண்பாலர் துவண்டது போல் கொடிகள் துவண்டன; மாந்தர் கண்ணீர உகுப்பதுபோல் மரங்கள் இலைகளை உதிர்த்தன.

## 70. எழுசீராசிரிய விருத்தம்

**தூது**

வினையேன் றன் மனமேங்கு வகையேக ரும்பேந்து
வேளேந்து மதமோய மலர்தம்மை
இனிதேவ யினறேவ டிந்தோடு தேனோடு
கொடியோடு மீன்மாந்து குருகீரே!
புனமேய புள்ளோடு மாவோடு பூடகைய
டர்ந்தோங்கு சர்வாங்க சுந்தரர்பால்
தினையேனுந் துயிலாது நைந்தேங்கு மெனதூது
செனறோத லிப்போது விரைவீரே.

---

வான்மீகி வருணிப்பது· அபிவ்ருக்ஷா, பரிப
ஸபுஷ்பாங்குர-கோரகா: ' உபநப்தோதகா நத்ய: பல
ஸராம்ஸி ச ||.

மாந்தர் செய்தது குடி கணம் புலிசிரம் கவிழ்தர—
கணங்கணமாகச் செயலற்றுத நலைமைக கவிழ்த்து நி

கடிநகர்தனை, கடிது ஒழிந்து —விரைவில் நீங்கி,
கொடி—சீதை, இளவல்—இலக்குமணன் இவர்க
கொடுவனம படர் கோமான: இராமபிரான்
"தலைவன" எனற தனிச்சொல் பெற்று ஆ
தாலிற்றது.

கண்ணபுரம...நலிய வலது: "திருக்கண்ணபுரஞ் செ
நாளுந்துயர் பாடு சாராவே" (நம்மாழ்வார்).

70 சில குருகுகளை விளித்துத் தலைவி, தன நிை
தலைவனிடத்துக் கூறுமாறு வேண்டுவது

குருகுகள் செய்வது · மலர் தம்மை இனிது அ
வடிந்து ஓடு தேனோடு, கொடியோடு, மீன மாந்தும்—மல
அயினறு, வழியும தேனோடு தாமரைக் கொடியோடும், த
திலுள்ள மீனை உண்ணுகின்றன நான நலிந்திருப்ப,
இவ்வாறு பூர்ண அநுபவங் கொள்வதே!

நான் விரும்புவது: என்னை வருத்தும் மன்ம
செருக்கு ஒயவேண்டும். வினையேன மனம் ஏங்கும்
கரும்பு ஏந்து வேள்—கருப்பு வில்லை ஏந்திக் கணை
பொழியும் காமன. இவனது மதம் ஒய—இவனது செ
அழியுமாறு

## 71. இன்னிசை வெண்பா

### தலைவி யிரங்கல

விரைமல ரைங்கணையார் வில்லே பிறையாம்
வரையில வாங்கணைகள் வான்மீனாம், கண்ண
புரமுறைவார் மேனியதாய்ப் போந்ததுவே காலன்
வரவுரையா ரெல்லே யிவர்.

---

தீயோர்களை அழித்து உயிர்களைக் காக்கும் பெருமானது திருவருளை நினைத்து, அவன் வாராமையால் நான் தூங்க விலலை.

அவன மாய்த்தவை புனம மேய புள்—மேய் நிலத்தில் கொக்காக வந்த பகாசுரன. மா—கேசி எனற குதிரை வடிவமான அசுரன. பூட்கை— யானை, குவலயாபீடம

இத்தலைவர் : சர்வாங்க சுந்தரனார் - கடடழகு வாய்ந்தவர' இவரிடத்து என நிலையை ஒத இப்போதே விரைவீர். திணையே னும— சிறிதேனும்.

71. தலைவனையே நினைத்திருககும தலைவி, பிறையை யும், விணமீனகளையும், இருளையுங் கணடு வருந்துவது.

தலைவர் : இவர் கணபுரம் உறைவார்; வரவு உரையார். தமது வரவைச சொல்லமாட்டார். எலலே! இவர் வரவு உரையார், எல்லே இவர் காலன: எனக்கு எமன் போன்றவர்

எல— இரவு. இனறு காணும் இரவின இருள் : கணணபுரம உறைவார் மேனி அதாய்ப போநதது : இப்பெருமானது திருமேனியைப் போலாயிற்று

இந்த இரவில் துனபுறுத்துவன : பிறை, விண்மீனகள். பிறை — பிறைவடிவுள்ள சந்திரன. விரை மலர் ஐங்கணையார் வில்—பரிமளம் மிகுந்த ஐந்து மலர்களைக் கணைகளாக் கொணட மன்மதனின வில. வில்லை வளைத்துத் துனபுறுத்து கிறான மன்மதன; வில்லிலிருந்து என்பாற் பாய்வன, வரையில்லாத கணைகள். இநதக கணைகள்போல்வன நான் வானிற் காணும விணமீன்கள்.

மன்மதனுக்குக் குடையாகும சந்திரன வில்லாக மாறியது; நட்சத்திரங்கள் கணைகளாயின; யானையாகும் இருள் காலனாக மாறியது. காமன், என் தலைவனின் மகன்; இவன் என்னை இவ்வாறு வருத்துவது நியாயமன்று எனபது நோக்கு எல்லே : விபரீதம்!

## 72. கலிநிலைத் துறை

### தலைவிநிலை கண்டு தாய இரங்கல்

வரவுநதி மேலே மறைவா யயனும் மலருலகும்
லரவுந்து முள்ளப் பெருமான மணிவண்ண வந்திலனால்
வரவுந்து முழயும மனங்கொண் டனளென வனிதைமணி
வரவுந்து நீரசூழ கணபுர மெனறிவள் வந்திக்குமே.

---

72. தலைவியின நிலையைக் கண்டு தாய் இரங்குவது. என்மகள் இப்பெருமானது வரவையும், இவன சூடும திருத்து ழாய் மாலையையும நினைத்துத் திருக்கண்ணபுரம் நோக்கி வணங்குகிறாள். "இவள நோக்கினாள், காணுமோ கண்ணபுரம் எனறு காட்டினாள்" எனபது ஒபபுநோக்கு.

தலைவனது மேனமை. வர உந்தி மேலே—சிறந்த கொம்பூழில மலர்ந்த தாமரையில் அமர்ந்த வரம்—சிறந்த. மறைவாய் அயன வேதங்களை ஓதும் பிரமன. மலர் உலகும்— அவன மூலமாகப் பரந்த உலகங்களும். வர நோனறுமாறு. உளளப பெருமான—உள்ளங்கொண்ட பெருமான்.மணிவணன்- மணியின நிறம வாய்ந்தவன், இயலபு வாய்ந்தவன்.

என வனிதை மணி பெண்களுள் மணிபோற் சிறந்த என் மகள் இப்பெருமானது வரவும் துழாயும் மனம் கொண்டாள்— இவற்றையே நினைத்திருப்பாள்.

இவள செய்வது. பெருமாளைத் தொழுவாள்.மணி வர உநது நீர் சூழ் கடலிலுள்ள இரத்தினங்களைக் கரையிற் சேர்க்குமாறு அலைக்கும நீர்சூழநதது, இந்தத் தலம். "கரையெடுத்த சுரிசங்குங் கனபவளத் தெழுகொடியுந, திரையெடுத்து லருபுனல்சூழ் திருக்கண்ணபுரத் துறையும்" (திருமங்கையாழவார்). வந்திக்கும—தொழுவாள.

யமக அமைப்பு இசசெய்யுளிற் காண்க.

வர உந்தி மாலோன் வந்திலன, என் மகள் இவனது வரவும் துழாயும் மனங் கொண்டாள்; கணபுரம் வந்திக்கும். மணிவர உந்து புனல்—மணிகளைக் கரையில் அடரச் சேர்க்கும் தெண்ணீர் (தடங்கள்).

## 73. கட்டளைக் கலித்துறை

திக்கு மலிபுகழ் வீடணற் காமுன் திருவரங்கம
புக்குப் புனிதன் கிடைகாட்டுங் கண்ண புரமிதனில்
மிக்க மழவால் மிளிர்தரக் காட்டுமால் மெய்யழகும்
செக்க ருடையுஞ் செருக்கின நடையுஞ் சிறப்புறவே.

## 74. அறுசீராசிரிய விருத்தம்

சிறப்புயருந் திருவரங்கப் பெருநகரோ?
தெனதிசைவா யோஙகல தானோ?
விருப்புயர விண்ணவரும மண்ணவரும்
வணங்குவட விலங்கல தானோ?

---

73. திருவரங்கம் பெருமானுக்கு மேலை வீடு, திருக்கண்ண புரம் கீழை வீடு அங்கு விபீடணனுக்குத் தன கிடையழகைக் காட்டும பெருமான இங்கு தனது நடையழகைக் காட்டுகிறான்.

புனிதன—பெருமான, அனபர்க்கு அருள் பெய்வதே தருமமாகக் கொண்டவா. கிடை: சயனத்தின அழகு. ''ஸ்ரீமாந் ஸுகஸுப்த: பரந்தப.'' என்பதில் நோக்கு. ''தென திசை இலங்கை நோககி'' பள்ளிகொள்ளும் பெருமான, திருககண்ணபுரத்தில், விபீஷணனுக்கு அருளுவதற்காக அவனது சந்நிதியை நோககி நடைபயில்கின்றான அமாவாசை யில் நண்பகலில் திருக்கைத்தலத்தில் சௌரிப பெருமாள் எழுநதருள்வது குறிபபு

மெய் அழகு மிளிர்தர, காட்டும், செக்கர் உடை: செவ்வரத்த உடை; பீதாம்பரம. செருக்கின் நடை; மேன்மை தோனற கமபீரமான நடை; நாலு வகைபபடட நடை.

74. சோலையில் நிற்குந் தலைவியைக் கண்டு, தலைவன், அவள் உறைவது எநதத் தலமோ எனறு ஆய்வது.

சிறப்பு உயரும்; தெனனாடும வடநாடும் தொழுவதால். தென திசை வாய் ஓங்கல்—தெனதிசைக்குப் பெருமை அளிக்கும் அழகர திருமலை ஓங்கல்—மலை ஓஙகல், விண்ணவரும் ஓங்கி யிருப்பது. விருப்பு உயர., விலங்கல். திருவேங்கடமலை. ''கண்ணா வானெனறும், மண்ணோர் விண்ணோர்க்குத் திண்ணார் வேங்கட, விண்ணோர் வெற்பனே.'' விலங்கல்—மலை.

மருப்புயரும் மதவேழ மளித்தவர்தம்
மங்கையொடு வைகு மத்திப்
பொருப்பதுவோ? கண்ணபுரப் பொன்னகரோ?
பொழினிறை மடமா னுனக்கே?

## 75. கலிநிலைத் துறை

### இரங்கல்

மானார் கேசன பாலே மாலாய் வருவாரெம்
மானார், வானோர் மனுக் காமண் ணிரந்தாரெம்
மானார், வானே யூர்வான மானும மணந்தாரெம்
மானார், என்பால் வாரார் மாணார் போதாவே!

---

மருப்பு—தந்தம். மருப்பு .. மதவேழம்— ஸ்ரீ கஜேந்த்ராழ் வான். அத்திப் பொருப்பு—ஹஸ்திகிரி.

பொழில் நிறை—பொழிலில் நிற்கின்ற. மடமான்: அடையடர்த்த உவமையாகு பெயர்.

75. தலைவனைக் குறித்துத் தலைவி ஒரு போதாவைத் தூதாக அனுப்புவது போதா— நாரை வகை. போதாவே! என் தலைவர் என்பால் வாரார்; என்னே' என்கிறாள்.

பரமசிவனிடத்துப் பிரேமம் வாய்ந்தவர் என்பால் வாரார். மான் ஆர் கேசன—கங்கையான பெண்ணைக் கேசத்தில் அடைத்தவர். மாலாய் வருவார—பிரேமத்தோடே உதவி செய்பவர். பிரம கபாலத்தை அவரது கரத்தினினறும் அகற்றித் தமது திருமேனியில் ஒரு கூறு அளித்தவர். எம்மானார் எனக்குத் தலைவர்.

மேலும் வானோர் மன்னுக்கா மண் இரந்தார்— இந்திரன் இழந்த செல்வத்தை மீட்டளிப்பதற்காகத் தன்னையுங் குலைத்துக் கொண்டு மாணியுருவில் மகாபலியிடம் மண்ணை இரந்தார்.

மேலும், உபரிசரவஸுவின் பெண்ணை மணந்தார். அவளிடம் பக்தியை விளைவித்து அவளை மணந்தார். வான் ஊர் மன—உபரிசரவஸு. இம்மன்னனது மான—மானபோல் நோக்குடைய பதுமினித் தாயார், ''மானநை நோக்கி'' என்பது போல,

எம்மான்: அருளுவதே இயல்பாகவுடைய என் தலைவர். இவர்களது குறையைத் தீர்த்த இவர், என் குறையைத் தீர்க்க வரவில்லையே என்பது குறிப்பு.

## 76. வஞ்சி விருத்தம்

போதமர் காவிற் புணர்ந்தவர்
வேதமு னீந்தவர் வேய்முடி
மாதிர மேலுற வளர்ந்தவர்
பூதரர் கண்ண புரத்தாரே.

## 77. இருவிகற்ப நேரிசை வெண்பா

### மேகவிடு தூது

பூங்கணை நும்போற் பொழியு முடலியால்
ஓங்குபே ராசை யுலபபிலதால்—ஓங்குங்
கருமுகிலகாள்! ஓதுவிரோ கணண புரத்தார்க்
குருகுமிதென மேனிநனை யோர்நது.

---

76. தோழி, பூத்தரு புணர்ச்சியில அறத்தொடு நிற்றல் கூறுவது இது. தாய் தன மகளைப் பற்றிக் கூறுவது

போது அமர் காவினில்: இதனாற் குறிப்பது, பூத்தரு புணர்சசி. போது—மலர்கள் கா—பொழில். புணர்ந்தவர்—எனனுடன புணர்ந்து களிததவர்.

இவரது மேனமை: முன் வேதம் ஈந்தவர். வேதங்களை! இழந்து துனபுறற பிரமனுக்கு இவற்றை மீடடளித்தவர்.

அனறியும்: வேய் முடி (வேய்ந்த கிரீடம்) மாதிரம் மேலுற (ஆகாயத்தில் ஓங்குமாறு) வளர்ந்தவர்: திரிவிக்கிரமனாக பூதரர்—பார் முழுதும் வயிற்றுள் ஒடுக்கிக் காத்தவர்: அன்றியும் பூ மியை மருப்பில் வைத்துகந்த வராகப் பெருமான' ''அஹம் ஸ்மராமி மத்பக்தம்'' என்றவர்

தலைவியின தாய் கூறுவது: 'என மகளை நயந்தவர் சாமானியரல்லர்'' எனபது.

77. இப்பெருமானை நினைந்துருகுந் தலைவி சில மேகங் களைத் தூதாக அனுப்புவது.

ஓங்கும கருமுகில்காள்! —கிளர்ந்தெழுகின்ற மேகங்களே நும்போல் பூங்கணை உடலியால் — நீங்கள் நீர் சொரிவது போல் மலர்களைப் பொழியும் மன்மதலால். அவனால் எனக்குப் பெருமான மேல் ஆசை அளவிலது. உலபபிலது—அழியாது. அவனது அழகுக்கு ஆகரமான பெருமானது அழகில் ஆழ்ந்தேன. கண்ணபுரத்தார்க்கு இதனை ஓதுவீர்— உருகும் என மேனி இது தனை ஓர்ந்து.

## 78. அறுசீராசிரிய விருத்தம்

### கேசவ நாம மகிமை

ஓரிற் பிரமன சடையாற்கு
முற்ற நாதன தானாகிச்
சீறிச சினந்த கேசிதனைச்
செற்றான பரிவாற் கோவலர்பால்
காரிற் பொலியுங குழற்கற்றை
கண்ண புரத்தா னேற்றுளனாற்
பாரிற் கேச வனெனும்பேர்
பரவப் பனடத்தா னிங்ஙனமே.

---

78. பெருமானின திருநாமங்களுள் முதல் நிற்பதான கேசவ நாமத்தின் மேனமை.

இந்தத் திருநாமத்தின பொருள் : பிரமனுக்கும் சிவனுக்கும் பிதா. பரமசிவன கூறுவது' "க என்பது பிரமனைக் குறிககும். ஈசன் எனபது நான்; நாங்கள் இருவரும உனது மடியிலே உண்டானவர்" என்று நாராயணனைக குறித்து

இரண்டாவது பொருள் : கேசியைக கொனறவன. இத்திரு நாமம் நாதர பகவான கண்ணனுக்கு நல்கியது. சீறி, சினந்த கேசி—குதிரை வடிவில் ஆயரகளையும கண்ணனையும் அழிப்பதற்காக வந்த அசுரன. சினத்தால் பாரைப் பிளந்து சீற்றமுடன வந்தது இக்குதிரை.

கோவலர்பால் பரிவால செற்றான—கோவவர்களைக் காப்பாற்றுவதறகாக.

மூன்றாவது பொருள் : காரில் பொலியும் குழல் கற்றை—மேகத்தினுங் கறுத்து விளங்கும திருக்குழறகற்றை வாய்ந்தவன் "குழலழகர்" எனறவாறு.

பாரில் பரவ : சவரிராசன் எனற திருநாமம் இந்தப் பெருமானுக்கு, குழலழகு வாய்ந்ததால். சவரிமுடி இப்பெரு மானுக்கே உரியது.

"கெடும் இடராய வெல்லாங் கேசவா என்ன" என்றவாறு இந்தத் திருநாமத்தை ஓதுவதால் துனபமெல்லாம் நம்மை, விட்டகலும்.

கண்ணனுக்கு கர்க்கர் இட்ட திருநாமம் : க்ருஷ்ணன; இந்திரன வெளியிட்ட திருநாமம் : கோவிந்தன்.

## 79. எண்சீராசிரிய விருத்தம்

இளவேனிற் காலம்

பரவுறு மென்காலதான் தடவுறு சாரளமும்
படர்தரு பானிலவுங் குயில்பொழி கீதமொடு
விரையெறி பூவணையும் மென்பனி நீர்ப்புழுகும்
வேனிலும் மேலடுமால், வாழ்வினி மேலிலையால்
மறைதரு மெம்பெருமான, மலர்வரு மானபெருமான
வானவர் தம்பெருமான கணபுரத் தார்பெருமான்
வரியெழு மரவிந்த மிசைவரு மனனங்காள்!
மலருகு தேனனையார் வந்திலர் வந்திலரே!

---

77. வரிசை வரிசையாக வுள்ள தாமரை மலர்களில் அமர்ந் துள்ள அனனங்களைப் பார்த்துத் தலைவி கூறுவது:இவ்வாறான வசந்த காலத்தில் நான தலைவனை விட்டு எவ்வாறு உயிர் வாழ்வது?

என்னை நலிவன: தெனறல், நிலவு, குயிலின் கீதம், மலர்ப்படுக்கை, பனிநீர்ப் புழுகு.

பரவுறு மென்கால்—பரவுகின்ற தெனறல். இது தடவுறு சாரளம்—இது புகுந்து வரும் பலகணி. படர்தரு பால் நிலவு—பூமிப்பரபபடர எஙகும பரவுகின்ற வெளுத்த, இனிய திலா. பால் நிலா – பால் போனற நிலவு.

குயில பொழி கீதம—குயில் மகிழ்ந்து கூவும் இனிய குரல். ஓடு: எணணும பொருளது

விரை எறி பூ அணை—பரிமளம் எங்கும் வீசுகினற மலர் களாலான படுக்கை. மெல் பனி நீர்ப்புழுகு—குளிர்ந்த பனனீர் கலநத புழுகு. இவறறிலும மிகுந்து துனபுறுத்துவது வேனில்: வசந்த காலம்.

காரணம்: தலைவர் வந்திலர். ஆதலால இனிமேல் வாழ்வு இல்லை; ஆல்

இத் தலைவர்: மறை தரும் எம்பெருமான—மறைகளை ஓதி வெளியிட்ட முதல்வர். மலர்வரு மான் பெருமான்—தாமரை மலரில் வநதவளின தலைவன்; மான–மான போலும் நோக் குடையவள். வானவர தம் பெருமான: நித்ய சூரிகளின் தலைவர். மலர் உகு தேன் அனையார்–நீங்கள அமரும் மலர்கள் உகுக்கும் தேன போனறவர். நீங்கள் தேன் பெறுவீர்; நான் பெறவில்லை.

உலகினருக்கு இனியன யாவும் எனனை அடுவதே! எனனே என நிலை.

## 80. எழுசீராசிரிய விருத்தம்

பெருமான அமுது செய்தவை

தேனினு மினியன தீங்கனி தேசெறி
தவத்தினள் நல்க வயினறனைபின
ஆனின மடவியில் மேயதர வேதிய
ராயிழை யாரன முணடனைநீ
பானல நங்கையின நாத னளித்திடப்
பரிந்தவன பொங்கலு கந்தனையால்
வானெழு திண்மதிள வளர்தரு கண்ண
புரத்துறை மாதவ லாமனனே.

---

80. அவதாரங்களில் அனபர அளித்தவைகளைப் பெருமான அனபுடன புசித்தது "பத்ரம தோயம் பலம், புஷ்பம்" எனற சுலோகம் ஒப்பு நோக்கு.

இராமாவதாரத்தில் சபரியும், கிருஷ்ணாவதாரத்தில் முனிவர் மனைவியரும், அர்ச்சையில் முனைய தரையரும் அளித்ததைப பெருமான புசித்தான.

தேசு எறி தவத்தினள்—தவத்தால் சோதி வாய்ந்த மேனியுடைய சபரி தேனினும் இனியன தீங்கனி—தேனினும் இனித்த கனிகள்

பினனர்; ஆன் இனம் மேய்தர, வேதியர் ஆயிழையார்—மறையோரின் மனைவிமார். ஆயிழையார் அனம் (அன்னம்). ஒரு நாள் காட்டில் மாடு மேய்க்கும் போது ஆயர் சிறுவர் பசியால் வருந்தக் கண்ணன் சிலரை வேதியரது யாக சாலைக்கு அனுப்பினான. சடங்கு முடிவதற்குமுன் வேதியர் அன்னம் அளிக்க மறுத்தனர். இவர்களது மனைவிமார் கண்ணனை யஜ்ஞமூர்த்தி என்றுணர்ந்து உணவுடனே இவனிடம் அன்னம் கொண்டு செனறனர். இந்த இடம் பத்தவிலோசனம் எனப்படும்.

பால் நல மங்கை: பால்போல் இனிய சொல்லுடைய காதலி. பால் போலும் வெளுத்த சொல்; மனத்திலொன்று கொண்டு வாயால் ஒனறு சொல்லாதவள். நாதன: இவளுக்கு நாதன் முனைய தரையர். இவர் சோழனின் படைத் தலைவர். இவர் அன்பால் பெருமானுக்கு அர்ப்பித்த பொங்கலைப் பெருமான் ஏற்றுக் கொண்டான். இன்றும் இதன் நினைவாகப் பெருமான் தினந்தோறும் அர்த்த சாமத்தில் முனையதரையன் பொங்கல் அமுது செய்கிறான்.

## 81. நேரிசை யாசிரியப்பா

வருககமோனை

கண்ண புரத்துறை கனியைக் கரும்பினைக்
காரகம் மனனுங் காரனை வண்ணனைக்
கிளருமப் புகருடைக கடிகையா ளரியைக்
கீதச் சுவையனை வேங்கடக கிரியனைக்
குடந்தைக கிடந்த குருமணித் திரளைக்
கூடலி லுறையுங் கோமளச் சோதியைக்
கெழுமிய முத்தாய் கிளரொளிப் பவளமாய்க்
கேழில மரதகக் கிரியென நினறு
கையி லைமபடை யேந்துங காளையைக்
கொடிசேர் மாடக் கோவலூ ராயனைக்
கோழிக கோனறனை யேத்துமவர்க்
கௌவிய மெனப தெங்ஙனு ரைமினோ.

---

இந்த வரலாறு காண்பது சோழமண்டலச் சதகத்தில்: புனையங் குழலாள பரிந்தளித்த பொங்க லமுதும் பொரிக் கறியும், அனைய சவரி ராசற்கே யாமென் றளித்த வாதரவின், முனைய தரையன பொங்கலென முகுந்தற் கோது முதுகீர்த்தி, வனையும பெருமை யெப்போதும் வழங்குஞ் சோழ மண்டலமே.''

81. பெருமானுடைய பெருமை, இலன் மேவும் திருப்பதி கள் கனி—காணும்போதே உண்பது கரும்பு—சாறாய்ப் பருகுவது. காரகம்: ஒரு திவ்ய தேசம். கார் அனை வண்ணன் — மேகம்போல் நிறமுடையவன், இயல்புடையவன், சிறுமை பெருமை பாராது யாவர்க்கும் அருள்செய்பவன. அரி—சிங்கம்; நரசிம்மமூர்த்தி. கீதச் சுவையன—கீதத்தால் பெறும் சுவை போல் நமக்கு இனபம் அளிப்பவன். குருமணி—சிறந்த மணி. கூடல்; ஒரு திவ்யதேசம் (மதுரை). கோமளம்: ஒரு வகை மணி. கெழுமிய—சிறந்த. விழுமிய—மேன்மையான. கேழ் இல் ஒப்பே யில்லாத, கோவலூர் ஆயன் — திருக்கோவலூர் எம்பெருமான. கோழி—உறையூர்.

இவ்வாறு திவ்யதேசங்களில் அடியார் வணங்க எழுந்தருளி யிருக்கும் சவரிப் பெருமாளை ஏத்துமவர்க்கு, ஔவியம் என்பது எங்ஙன—தீவினை எவ்வாறு நேரும்? உரைமினோ— உரைப்பீர்.

## 82. கலிநிலைத்துறை

கூதிர் காலம

மின்னடர் முடியினர் மேவிடு கணபுரம் மீளார்போல்
பொன்னினை வாலலர் போமிட மாய்ந்திது போகாதோ
மின்னனி முகிலினம் மெலிவுறப் பெய்பனி யென்மேலே
வன்னியின பொறியினில் வெம்முறச் சொரிதரும் வாடையிதே!

## 83. எண்சீராசிரிய விருத்தம்

பருவங்கண்டிரங்கல்

சொரிமழையை வரையதனால் துணித்த கோமான்
சௌரீசர் சேருநகர்ச் சோலை தன்னுள்
இருதலைய விகங்கமென விழைந்து மிமையா
திருந்தவெனைப் பிரிந்தவர்த முள்ள மென்னே!

---

82. கூதிர காலம்—சரத்காலம்; பனிக்காலம். வாடையால் வருந்துந் தலைவி, இக்காற்று தன தலைவனைத் தொடாந்தால் அவன மீளக்கூடும் எனறு ஒதுவது.

மின அடர் முடியினர்: இரத்தினங்களால் ஒளி. "கதிராயிர மிரவி கலந்தெறித்தா லொத்த நீண்முடியன" (பெரியாழ்வார்).

பொன் நினைவால போனவர்: பொருளீட்டுவதற்குச் சென்றவர் கணபுரம மீளார்போல—மீளமாட்டார் போலக் கருதி அவர் போமிடம் ஆய்ந்து இது (இந்த வாடை) போகாதோ? இவ்வாறு போனால் என துன்பத்தை அறிவிக்கலாம்; அறிவித்தால் அவர் மீள்வர்.

என துனபம: மின அணி முகில் இனம் எனமேலே பெய பனி. குளிர்நத துளிகள். இத்துளிகளைச் சொரிவது வாடை. பனியை, வனனியின் பொறியினில் வெம்முற சொரிதரும—நெருப்புப் பொறியினும் வெப்பம் மிகுமாறு தூவுகின்றது. வன்னி—நெருப்பு.

83. தலைவன் குறித்த கார்காலம வந்தும், அவன வராதது கண்டு தலைவி இரங்குவது.

தலைவனது ஆற்றலும அருளும்: சொரிமழையைத் துணித்த கோமான்: இடையறாது பெய்த மழையை ஒரு மலையை ஏந்தித் தடுத்த தலைவன்

சேரும் நகர்ச் சோலை தனனுள்—கூடிப் பிரிந்த இடம். நாங்கள் எவ்வாறு இணைந்தோம? இரு தலைய—இரண்டு தலைகள் உடைய.

இருசுடருங் கவளமென விழுங்கு பேழ்வாய்
இடிமுழக்க மிந்திரவில லோடை நெற்றி
சொரிமதக்கொண மூக்களிற்றின் மினனே யாகும்
தோடடியென வாதமெழு கால மனமே!

## 84. இருவிகற்ப நேரிசை வெண்பா

மன்று பறைகறங்க மாயக்கூத் தாடுவர்தாம்
இன்று மறந்தா ரெளியேனை—சென்று
குயிலுறையுங் காவணைசெய கண்ணபுரங் கண்டார்
உயிரனையா ருள்ளங் கடிது.

---

விகங்கம்—பறவை நாங்கள் இருவரும் இரண்டு தலை படைததாலும், இரண்டு தலையுடைய பறவை போல், ஓர் உடலும ஓர் உயிருமாகக் கலந்தோம். இமையாது: பிரிவுக்கு அஞ்சிக் கண்ணுறங்காமல்

இக்காலமோ கடிது காற்று மதயானைபோல் துன்புறுத்து கிறது. எவ்வாறெனனில்? இருளில் இரண்டு சுடர்களும் இயங்க வில்லை; சநதிர சூரியர்களின ஒளியே இல்லை. இவை இரண்டை யும் விழுங்கிய பேழ்வாயுடையது இருள். பேழ்வாய்—பெரிய வாய், குகைபோற பெரியது. காறறுடன் முழங்கும் இடி: முழக்கம்—களிற்றின பிளிறு. இந்திரவில்—வானவில. நெற்றி ஓடை—களிற்றின முகபடாம். கொண்மூ—மேகம். சொரி மதம்—களிறு பெருககும் மதமாகும். மேகத்துடன கூடிய மின, தோடடி—அங்குசம.

84. தலைவி இரங்குவது: ஆயர்பாடியில் குடக் கூத்தாடியவர் எனனை மறநதார். இவரது உள்ளம் கடிது; அந்தோ!

மனறு—வெளி. பறை—வாத்தியம். கறங்க—ஒலிக்க. மாயக் கூத்து—யாவருங் கண்டு வியக்குமாறு ஆடிய கூத்து. குயில் சென்று உறையுமகா அணைசெய் பொழிலின் வளங்கண்டு குயிலகள் உறையும், பொழிலகள் சூழ்நத. கண்ணபுரம் கண்டார்—இங்குப் பொருந்துவதே தமக்கு இன்பமாகும் என்று உறைந்தவர். உயிர் அனையார்—எனக்கு உயிர் போன்றவர்.,

## 85. எண்சீராசிரிய விருத்தம்

வைய வந்தவர்கள வாழ்த்துமாறு மேனி யழகு

உயிரனை யாருடற் பாரினிற் சாயவே
ஒழிவிலா தருவிசெய் தேங்கிடுந் தையவார்
செயிரிலா வலியுடை வாலிதன் தேவியும்
செகந்தனை யொடுக்கிடுந் தசமுகன் தாரமும்
அயிரெமு வாளினால வந்தபங் குற்றவல்
லரக்கியும் வாழ்த்திடு மழகினான் வாழிடம்
வயிரமும் முத்தொடு பவளமும் மல்குநல்
வளமுடைக் கணபுர மாநகர் தானதே.

---

85. தலைவியின மனம் பெருமானிடம் செல்லுவது வியப்பாமோ? வைய வந்தவரும வாழ்த்துமாறு அழகுடைய பெருமானனறோ இவன்? இவனால் துனபமுற்ற தாரை, மண்டோதரி, சூர்ப்பணகை இவர்கள் இவனைப் பாராட்டினார்.

ஒழிவு இலாது அருவி செய்து ஏங்கிடும் தையலார்—இடைவிடாமல் கண்ணீர் பெய்து ஏங்கும பெணபாலர்.

முதலில் தாரை. செயிர் இலா வலி உடை வாலி—தோல்வி என்பதே காணாத வலிமை உடைய வாலி இராவணனையும் வாலில சுற்றிய வல்லமை குறிப்பு.

இரண்டாவது மண்டோதரி தசமுகன—பத்துத் தலையுடைய இராவணன. இவனது தாரம்: மனைவி மண்டோதரி.

மூனறாவது சூர்ப்பணகை. அயிர்—கூர்மை. பங்கு உற்ற வல அரக்கி—மூக்கு பங்க முறற சூர்ப்பணகை. வல் அரக்கி "இலங்கை ஆட்டி"; இலங்கையை ஆட்டிவைக்கும் சொல் வன்மை. இராவணன "இலங்கை ஆளன்", இவள் இவனையும் ஆட்டி வைப்பவள். ஜனஸ்தானத்தில் கரதூடணர் களையும் ஆட்டிவைக்கும் வலிமை வாய்ந்தவள்.

தாரை போற்றிய வகை: "த்வம் அப்ரமேயசச". மண்டோதரி சொலலியது. "தமஸ: பரமோ தாதா சங்கசக்ர கதாதர:"

சூர்ப்பணகை, இவனது அழகை எடுத்தோதினாள். "தருணௌ ரூபஸம்பந்நௌ" (இளமை வாய்ந்த இருவர், உருவத்தால் சிறந்தோர்—இராமன், இலக்குவன இவர்களைப் பற்றி. "ராமோ ரமயதாம் வர:"—என்றார் வான்மீகி, இவனது கட்டழகைப் பாராட்டி.

## 86. எண்சீராசிரிய விருத்தம்

வலைச்சியர்

கண்ணபுரக் கார்வண்ணன் பொற்கோயின் முனனே
கயல்கொள்ளக் கயங்கண்டீர் பயமுற்றே னெனபால்
வண்ணமட ரஞசனக்கண் வலைவீசும் மகளீர்!
வலைவீசீர் வாவியிதில் குமுதமொடுங குவளை
வணணமெழு மரவிந்தந தம்மூடுங கெண்டை
வாளையிவை நுமமுகத்த அம்புகொள வில்லை;
லணணமெழு சங்காழி கொணடகர மோச்சி
வானமுதலை நோககிவிரைந தோடிமறை வீரே

86. திருககுளததில மீனபிடிகக வரும் வலைசசியரை விளித்துக் கூறுவது இது இக்குளததில வாளை, கெணடை இலை இலலை, முதலையே உளளது, விரைநது ஓடுவீர் எனறு

கயல - மீன வகை; பொதுவாக மீனகள். கயம்—குளம்; திருக்குளம கயம கணடீர்—மீனபிடிக்க இககயம் ஏறறதெனறு வநதீர்; நனறு'

நீங்கள் செய்வது . பயம உறறேன எனபால வண்ணம அடர் அஞசனக கண வலை வீசும—தண்ணீரில் நிற்கும் எனபால கணகளாகிய வலையை வீசுகிறீர. லணணம அடர்—அழகு நிறைநத அஞசனக் கண—மை போல கறுதத விழி; அஞசனம் மங்களகரமாகத தீட்டுவது. நீங்கள் வலை வீசுவதால் பயம் உற்றேன் -அச்சங் கொணடேன; இந்த வலையினினறு தப்புவதில்லை பயம—நீர், அச்சம.

நான சொல்லுவதைக கேடபீர் : இப்புனவில குமுதம், குவளை, வண்ணம் எழும அரவிநதம் (தாமரை) இவைகளோடு வாய்நதவையாகக் கருதிய கெண்டை வாளை—இவை இல. ஆகில் எங்கு உள? உமது முகத்தில் அரவிந்தம் : உமது முகம்; குமுதம் : வாய்; குவளை · கணகள், கெணடை, கண்களின் நீட்சிக்கும், வாளை கண்களின பிறழ்ச்சிக்கும ஒபபு அம்பு—தண்ணீர்.

அனறியும, இங்குத் தணணீரில் வான முதலை உள்ளது. ஆதலால் நீங்கள் செய்வது · வளைகள், மோதிரங்கள் அணிந்த கைகளை வீசி ஓடி மறைவீர். சங்கு—வளை ஆழி—மோதிரம், வான்முதலை—பெரியதான முதலை.

## 87. வெண்டுறை

மறைதந்த மாயவனை வானாளும் முன்னவனை
மாதாள் மார்வில
உறவந்த வொண்டுளவத் தாரானை யோங்கோத
வணணத் தானை
உறிகொண்ட நறுவெண்ணெ யுண்டுகந்த வுத்தமனைக்
கறைகொண்ட பையரவிற் கணடுயிலுங் கற்பகத்தைச்
சிறைவண்டு களிபாடுந் திருக்கண்ண புரத்தானை
உறவெனறுந் தனமெனறு முயிரெனறும் பாராட்டி
உறுகினற துயர்நீங்கி யுயர்வும பெறுவோமே.

---

உள்ளுறை: இந்தப் புனலுக்கு அதிபதி நாராயணன; வான் முதல்: பரமபத நாதன நீங்கள் செய்வது: அவனை நோக்கி, சங்கு சக்கரம பொதிநத உங்களது கைகளைத் தூக்கி வணஙகி, உங்களது இருப்பிடத்திற்கு ஓடுவீர். இவர்கள் வைணவ ராகலின் கரங்களில் சங்கு சக்கரப் பொறி ஏற்றிருப்பர்.

88. "ஒயு மூப்புப் பிறப் பிறப்பு பிணி வீயுமாறு செய்வான்" எனறவாறு, பெருமானைப் பற்றித் துனபங்களை அகற்றக் கூடும்.

மறைதந்த மாயவனை: பல அவதாரங்கள் செய்து வேதங்களை மீட்டளித்தவன. மாயவன—விசித்திரமானவை செய்யவலன. வான—பரமபதம். மாது ஆள் மார்பில் பெரிய பிராட்டியார் அமருந் திருமார்பில். தண துளவத்தாரானை. ஓங்கு ஓத வணணத்தானை—அடர்நத கடலின நிறமுடைய வனை; கடலபோல பெருமை வாய்ந்தவனை கறை-விடம், பை அரவு-படங்கள் கொணட அரவம்; ஆதிசேஷன. கற்பகம்: தனனையே அனபர்க்கு அளிப்பவன். சிறைவண்டு...—அழகிய சிறகு வாய்நத வண்டுகள் பொழிலகளில் தேனைப் பருகிக் களித்துப் பாடுகினற.

இப்பெருமானைப் பாராட்டும் வகை: உறவு என்று—"ஒருநற சுற்றம்" எனறு, தனம் எனறு—சிறந்த பொருள் எனறு; உயிர் என்று—உயிர் போலும் அருமையுடையவன் எனறு.

இதனால் பயன்: உறுகின்ற துயர்—பிறவிகளால் பெறும் துன்பம். உயர்வு: பெருமானுக்கே உரியவராகும் மேன்மை

## 88. எண்சீராசிரிய விருத்தம்

பன்னிரு திருநாமங்கள்

துயர்தனைக் களையுமென கேசவா! நாரணா!
தூயநன மாதவா! நங்கள்கோ விந்தனே!
அயர்வினை யறுக்குமென் விட்டுவே! எம்மது
சூதனே! அகலிடம் பாய்திரு விக்ரமா!
மயல்தரும் வடிவுடை வாமனா! சீதரா!
வாய்ரிடீ கேசனே! பதுமநா பாமிகு
லியமுடை யெளியதா மோதரா! எனறுமே
மேலவன சௌரிதாள் வாழ்த்துவா முய்யவே.

---

88. ஆயிரந் திருநாமங்களுடைய பெருமானது திருநாமங்கள் பன்னிரண்டும் ஓதினாலே போதும, உய்வதற்கு.

கேசவன: துயர்களைக் களைபவன. "கெடு மிடராய வெல்லாங் கேசவா என்ன."

நாரணன்: "நமமை யுடையவன்."

தூயநல மாதவன: "மாய்ந்தறும் வினைகள் தாமே மாதவா என்ன."

நங்கள் கோவிந்தன்—கோகுலத்தில் தோன்றியவன், திருத்துழாய் மாலை வேய்ந்தவன், சிறந்த மணிபோன்றவன்.

அயர்வு – துன்பம் விட்டு—விஷ்ணு எங்கும் உறைபவன' நமமை விட்டுப் பிரியாது காப்பவன.

மதுசூதனன—மதுவைக் கொன்றவன, மதுபோல் மனத்துக்கு இனியவன

அகலிடம்—பரந்த நிலத்தில். திரிவிக்கிரமன்—பூமியை யும் வானையும் தனககே யாகக்கொண்டவன.

மயல்தரும் வடிவு—மயங்குமாறு அழகு மேலோங்கும் திருமேனியுடைய. வாமனன—மனத்தைக் கவரும் அழகு வாய்ந்தவன.

சீதரன—பிராட்டியைத் திருமார்பில் ஏற்றவன.

ரிடீகேசன: இந்திரியஙகளுக்கு அதிபதி. தீநெறியைப் போககும் வலிமை வாய்ந்தவன.

பதுமநாபன—பதும மலரைத் திருநாபியி லுடையவன்; உலக முதல்வன.

தாமோதரன்—"எத்திறம் உரலினோ டிணைந்திருந் தேங்கி எளிவே" என்றவாறு.

## 89. எண்சீராசிரிய விருத்தம்

### இடைச்சி

மேலணவு பொனமதிள்சூழ் கணணபுரப் பெம்மான
மெலலடிகள் வாழ்த்திவரு மண்டர்தனிப் பாவாய்!
மேலெழுநல் லாடையொடு வெள்ளையளை பாலும்
மெயயெழுநின் கலசமிசை மல்குவது கண்டேன
வேலையெறி மண்ணிதனில் வந்தபெரு மாயன
மேனமைகெழு சரிதையுமே பாடிமறு கெங்கும்
மேலையுறை வானவர்கள் கேட்டுமகிழ் வெய்த
வெண்ணெய்கள வுண்டவனே! யெனறுவரு வாயே.

---

89. தெருவில் வெண்ணெய், தயிர, பால விற்கும் இடைச்சியை நோககிக் கண்ணபுரத் தெம்பெருமானின சரிதை யையும், அவன வெண்ணெய் களவுண்ட பெருமையையும் பாடி விற்குமாறு வேணடுவது இது.

அண்டர்—இடையர. அண்டர் தனிப பாவாய்!— இடையர் குலத்தில் பிறநதவளாய், அழகு வாய்நத பெணணே! மெல் அடிகள்—மலர் போன்ற திருவடிகள். மேல் அணவு—வானில் ஓங்கும். பொன மதிள் கணபுரத்துப் பொனமலைக்குக் காப்பான பொனமதிள், சிறப்பு வாயந்த மதிள்.

நின மெய் எழு கலசம் இவை—நீ தலையின்மீது கொண்ட இந்தக் கலசங்கள. மேல் எழு நல் ஆடை—மேலே அடர்ந்துள்ள ஏடுடன வெள்ளை அளை—வெண்ணிறமுள்ள தயிரும்,பாலும்— இவை மல்குவது கண்டேன்.

இனி, மெய் எழு கலசம்— ஸ்தனங்கள். மேல் எழுநல் ஆடை— போர்த்தப்பட்டுள்ள மெல்லியதான ஆடை. பால்: நல்ல நெறியைக குறிக்கும், தூய்மைக்கான தனனெறி கொள்வன தூய்மையாவது, ''ஊனுடையாழி சங்குத்தமர்க் கென்று உனனித்தெழுந்த என் தடமுலைகள், மானிடவர்க் கென்று பேச்சுப்படில வாழகில்லேன'' எனறவாறு.

நீ செய்ய வேண்டியது: வேலை எறி மண இதனில்—அலை வீசுகினற கடல் சூழ்ந்த இந்த உலகில வந்த மேன்மை கெழு சரிதை — அவதரித்ததால் மேன்மை மிகக சரிதங்களை. இந்தச் சரிதங்களைப் பாடி மறுகெங்குங் வருவாய்: தெருக்களில்

## 90. இருவிகற்ப நேரிசை வெண்பா

களங்கனி வண்ணத்தாய்! கண்ணபுரக் கோனே!
உளங்கனி வுள்ளோர்க் குயிரே! – வளங்கொள்
மறையோர் வழுத்த மகிழ்ந்துறைவாய், தோன்றற்
சிறையே சிதைப்பாய் திறம்.

## 91. பன்னிருசீராசிரிய விருத்தம்

கொற்றியர்

பாயும புள்ளின பாலூர்வார்
பாலன புள்ளே மேலூறப்
பத்தி செய்யுங் கொற்றியரே!
சித்தம நையும பெறறியரே!

செலவாய். உமது பாடடைக் கேட்டு, மேல் உறை வானவர் (நித்தியசூரிகள்) மகிழ்வர். "வெண்ணெய் களவுண்டவனே!" எனறு பாடுவாய். "வெணணெயுண எனனும ஈனச்சொல்" அங்குள்ளவர்களுக்கு நெஞ்சால் நினைப்பரிது.

கோலிந்தா! தாமோதரா! மாதவா! எனறு பாடி ஒருத்தி தயிர், நெய், பால விற்று வநதாள்.

90. பிறவியைத் தீர்க்குமாறு பெருமானை வேணடுவது. தோனறல் சிறை சிதைபபாய் - பிறவியால் பெறும் சிறையைத் தீர்ப்பாய். திறம் -- ஆற்றல இது.

வண்ணம் — நிறம் உளம கனிவு உள்ளோர்க்கு உயிரே — "நினைநது நைந்து உள்கரைந்துருகி" எனறவாறு, உனனையே நினைப்பார்க்கு உயிர் போனறவனே! வளம கொள் மறை— பெருமானது பெருமைகளை ஓதுவதால வண்மை. தோன்றல்— பிறப்பு. திறம்—குணம, தத்துவம், தனமை. இது உனது திறம்.

91. கொற்றியர்: வைணவச் சினனங்கள் அணிந்து தெருவில் பிச்சை ஏற்றுச செல்லும மகளிர். மாலைப் போதிலே தெருவில் துணிந்து செலலுங் கொற்றியரை நோக்கிக் காமுறும் ஒருவன, தனது வேட்கையைத் தெரிவிப்பது.

இவர்களுக்கு பக்தி: பாயும் புள்ளினபால் ஊர்வார் பால்— கருடாரூடனான பெருமானிடத்து: உள் அன்பு மேல் ஊற பக்தி செய்யும் – அனபு ஓங்குவதால் பக்தி கொள்ளும். இந்த பக்தியால் சித்தம் நையும்—சித்தம் நைந்துளது.

வாயும் பதிகள் நடந்தேநீர்
வாயம் புதியிற் படிந்தானை
வணங்கிப் பதினமர் சொன்மாலை
பாடிப புகுவீ ரிம்மாலை
மாயன கணை புரம்வந்தீர்
வாயின வண்ண முறநின்றீர்
உழையே நாடும விழியுடையீர்
மொழிவீர் கூட லழகரையே

---

நீங்கள் செய்வது: வாயும் பதிகள் நடந்து—வணங்கி வழிபடு வதற்கான திவ்ய தேசஙகளுக்கு நடந்து சென்று. வாய் அமபுதியில் படிநதானை வணஙகி— பெருமாள் பள்ளி கொள்வதற்காக வாய்ந்த கடலிலே தூயிலும் அப்பெருமானை இந்த திவ்ய தேசஙகளிலே வணங்கி. பதினமர் சொல் மாலை பாடி— ஆழ்வார்கள் பதினமர் அருளிய திவ்ய ப்ரபந்தங்களைப் பாடி. இமமாலை புகுவீர் – இவ்வூரில் இன்று மாலை இங்குப் புகுவீர். ஆண்டாள், மதுரகவி இவர்கள் அருளியவை உஙகளுக்குப் போகாவோ?

இமமாலை பாடிப் புகுவீர்— இந்த மாலைப் போதில் வந்தீர்? இத்தலத்துத் திருமாலைப் பாடிப் புகுந்தீர்.

நீங்கள் நிற்கும் அழகு: வாயின வண்ணம் உற திவ்ய ப்ரபந்தங்களைப் பாடுமபோது, உஙகளது வாயின் இயல்பு (அழகு) தோற்றுமாறு உடபொருள்: உமது உதடுகளின் சிவப்பு நிறம் தோனறி நான காண வநதீர்.

விழிகள்: உழையே நாடும வீதிகளின் பக்கத்தில் நாடு கினறன, அழகைப பார்ப்பதற்கு உழை நாடும விழி— மான் களும விரும்பிப் பார்க்குமாறு அழகுடைய விழிகள். அழகிய நோக்குடைய மானும வெளகி உங்களது விழிகளை நோக்கும். உழை—மான, அணமை.

நீஙகள் மொழிவது கூடல் அழகரை—திருக்கூடல் என்ற திவ்யதேசததில எழுந்தருளியிருககும பெருமானை; அழகர்— திருமேனியழகுடையவர். அனறி ஸர்வாங்க சுந்தரனான சவரிராசப் பெருமானோடு கூடவ—கூடுவது; அவனை வணங்கித் தொழுவது.

உடபொருள்: கூடல், அழகு அரை—உடம்போடு கூடுவதும் உமது அழகிய அரையும்.

வாயும் மனுவின் வயங்கூட்டி
வாயுந் தனமாந் துயங்காட்டி
மரையின மணிபால விரல்பாய
மறுகில் துணிந்து வருவீரே.

## 92. பன்னிருசீராசிரிய விருத்தம்

அருட்டிறம விளக்குவது

துணிவுடனே யண்டர்பலர் பண்டிபல
கொண்டபல தாழிமண்டுஞ்
சோறுதயி ரிக்குகனி கட்டியெனக்
குன்றுபல வீக்கி யெங்கும்
பணிவுடனே தோய்த்ததயிர் பாலனைய
வாவியெனப் பெயது நிற்பப்
பாய்ந்துமலை மீதிலொரு பூதவடி
வோடுமிவை முற்று முண்டாய்

---

உமது வாய் : மனுவின் வயம் காட்டி—நீங்கள் ஓதி வரும் திருமந்திரத்தின் ஏற்பை, அல்லது வலியையைக் காட்டி; அதாவது இயல்பாகப் பெருமையுடன் ஓதி. இதுவன்றி வாயும் தனமாம துயம் காட்டி—தனமபோல் வாய்ந்த த்வயத்தின் பொருளை நனகு உணர்ந்ததைக் காட்டி மரையின மணிபால் விரல்பாய—தாமரை மணி மாலையின மணிகளில் விரல்கள் பரவ, உரு எணணி உரைப்பதால்.

உட்பொருள் : மனு—விணணப்பம். துயமாம் தனம்—இரண்டாகிய ஸ்தனங்கள் இத்தகைய சேஷ்டையுடன் துணிந்து வீதியில் வருவீரே! எனறு வியப்பு.

92. பெருமான கோவர்த்தன வடிவில் பூசனை ஏற்றுப் பினபு அம்மலையைப் பெயர்த்தெடுத்து, ஆயர்களையும் பசுக் களையுங் காத்த திறம்.

அண்டர்—இடையர், பண்டி—வண்டி. தாழி—சால் சோறு, தயிர், இககு (கரும்பு) கனி, கட்டி (வெல்லம்) எனப் பல, குனறு என வீக்கி—பல குன்றுகளாகக குவித்து.

தோய்த்த தயிர், பால் அனைய வாவி என—தடாகங்கள் போல். ''அட்டுக் குவி சோறறுப் பருப்பதமும் தயிர் வாவியும் நெய்யளறும்'' (பெரியாழ்வார்).

துணிவுடனே வாசவனு மேவமுகி
லேழுமழை பெயய வாயர்
சோர்வுதனை நீக்கவெதி ரோங்குமலை
தனனையொரு சுட்டு விரலில்
அணவவொரு கணணியென யேநதியட
ரினனலதை நீகதி நினறாய்
அண்டுமவ ருயயவென வநதுதிருக்
கண்ணபுரம் மனனு வேநதே!

பூத வடிவோடும இவை முற்றும் உண்டாய்—கோவர்த்தன மலையே யாகி யாவற்றையும் உணடாய்.

பினபு நிகழ்ந்தது : இந்திரன கோபித்துக் கல்மழை பெய்வித்தான. ஏவ—காளமேகங்களைப் பெய்யுமாறு கட்டளையிட. ஆயர் நடுங்கினர். இவர்களது சோர்வுதனை நீக்க—இவர்களது தளர்வை அகற்ற. எதிர் ஓங்கு மலை தனனை—எதிரேயுள்ள கோவர்த்தன மலையை. ஒரு சுட்டு விரலில—சிறிய விரலின நுனியில் அணவ - சேருமாறு.

ஏநதிய வகை . ஒரு கண்ணி என, ஒரு மாலையைப்போல. அடர் இன்னலை—அடர்நதுள்ள துனபத்தை; தங்களது செல்வ மான பசுக்கள் துனபுறுவதால் இவர்களுக்குச் சோர்வு; இதுவே இன்னல்.

ஏந்தி —ஆயாசம் சிறிது மில்லாமல். ''கொடியேறு செந்தாமரைக் கைவிரல்கள் கோலமும் அழிந்தில, வாடிற்றில, வடிவேறு திருவுகிர் நொந்துமில'' பெரியாழ்வார்.

இவவாறு காக்கு மியலபுடைய பெருமான திருக்கண்ணபுரத் தில் மனனும் வேந்து. ''திருக்கண்ணபுரத் தரசு'' (குல சேகரப் பெருமாள). வாசவன —இந்திரன். கண்ணி—மாலை. அடர் இனனல்—அடர்நத துன்பம்.

இங்கு உறைவதன குறிப்பு : அண்டுமவர் உய்ய என— அன்போடு வந்து சேர்வோர் தங்களது துன்பங்கள் நீங்கி உய்யுமாறு.

## 93. பன்னிருசீராசிரிய விருத்தம்

மடக்கு

மனனும் பொழில்பாய் மெனகாலே!
விரைவாய மலராள் மனபாலே,
மணங்கொள வளமா தவிப்போதே!
அவர்பா லெனமா தவிப்போதே,
பொனனே சொரியும வரவழையே!
புவிமா திறையை வரவழையே,
புனலே முககும முகமஞேசே!
வினையே னெனககும முகமஞசே;
எனனே! கிள்ளாய்! கோகிலமே!
நீர்வாழ புனத்திக் கோகிலமே,
எழிலார் சோலை மருவலரே!
எனபா லனபர் மருவலரே;

---

93. தனது நிலையை நினைத்துத தலைவி புலம்புவது. திருக்கண்ணபுரத் திறைவரிடம் செல்லுமாறு இளங்காற்றைத் தலைவி ஏவுகிறாள் மனனும் பொழில்பாய்—திருக்கண்ண புரத்தைச் சூழ்ந்து பொழிலிற் பாய்ந்து பாய்ந்து, மணத்தை வீசும் இளங்காற்றே! மலராள் மனபால் விரைவாய்—பெரிய பிராட்டிக்குத் தலைவனான பெருமானிடத்து விரைந்து செல்வாய். நீயும் அவரைப்போல் இங்கு நாடி வந்தும் நான தவிப்பதே!

மணம் கொள் வள மாதவிப் போதே!—மணம் நிறைந்து, வடிவால் அழகிய மாதவி மலரே! என் மா தவிப்பு ஒது—எனது பெருந் துனபத்தை அவரிடங் கூறுவாய்.

பொன் சொரியும் வரவழையே!—பொன் நிறத்தை எங்கும் பரப்பும் சுரபுன்னையே! புவி மாது இறையை வரவழை—பூமிப் பிராட்டியின கேள்வனை வருமாறு அழைப்பாய். கோல வராக வடிவில் பூமிப் பிராட்டியைக் கோட்டில் அமைத்தவர் இன்று உருமாறறுங் கொள்ள வேண்டியதில்லை. "அஹம் ஸ்மராமி மத்பக்தம்" என்று சொல்லிய இவரிடம் ஒரு வார்த்தை சொல்லி, அவரை என்னிடம் இரண்டடி எடுத்துவரச் சொல்.

புனல் முகக்கும் முகம் மஞ்சே!—நீரைப்பருகிக் கழுத்தளவுங் கொண்ட மேகமே! விரைவாய். எனக்கும் உகம் அஞ்சு—இவரைப் பெறாத எனக்கு ஒவ்வோர் இராவும் ஐந்து யுகம்போல் நீள்வதாம்.

பொன்னா யிழையாள் கயற்கண்ணி
பொலியு முரத்தார் வயற்கண்ண
புரத்தார் கரிபால் விரைதநதார்
என்பால் விரைத லரிதந்தோ!

## 94. பதினான்குசீராசிரிய விருத்தம்

பால்வழியுஞ் சீர்வதன மழக்கனறாய்க் கனறுநிரை
மேய்த்துவருங் கண்ணபுரப் பெம்மான
பங்கயக்கை பற்றிவரு மின்குழலே! என்றுமவர்
வாயமுதம் மாந்திமகிழ் கினறாய்

கிள்ளாய்!—கிளியே! கோகிலமே!—குயிலே! நீர் வாழ் புனம் திக்கு கிலம்—நீங்கள் வாழ்கின்ற நிலம் உள்ள திக்கோ (திசையோ), பாழாயிற்று.எங்ஙனம்? கிளி தலைவரது திருநாமங்களை ஓத நான கேடக இயலவில்லை. எனது தவிப்பாலே "நாராயணனை வரக்கூவாய்" எனறு கோகிலத்தை வேண்டினேன; ஆகுலமே நிகழ்வது.

மரு அவரே!—மருவின பூவே! அன்பர் மருவலர்—என்பாற் கூடவில்லை, (மருவுதல் இலலை), ஆனால் மருவலர் ஆனார்—பகைவரானார். அனபர் பகைவராவதே!

என்னுடைய தவிப்பு: ஆயிழையாள், கயற்கண்ணி, பொன் பொலியும் உரத்தார்—பெரிய பிராட்டியார் தோயும் திருமார்புடைய. கண்ணபுரத்தார் எனபால் விரைதல் அரிது, அந்தோ!—விரைந்து வந்து துனபத்தைப் போக்குவது அரிதாயிற்றே. இவர் கரிபால் விரை தநதார்—யானையைக் காக்க விரைநதார்.

94. "சங்கரையா! உன செல்வம் சால அழகியதே!" என்று ஆண்டாள் கணணன திருக்கையிலுள்ள சங்கைப் பாராட்டினாள் பெருமானது கரத்தைப் பறறி வாழும் வேய்ங்குழலின் பெருமையை இசைப்பது இப்பாட்டு.

வதனம்—முகம். மழக்கனறு—இளங்காளை. "கன்று மேய்த்தினிது கந்த காளாய்!" (திருமங்கையாழ்வார்).பங்கயக்கை பற்றி வரும இன குழலே!—பெருமான இதைப் பற்றுவது; அன்றி இது பெருமானது கையைப் பற்றுவது. வாய் அமுதம்—வாயில் ஊறும் அமுது. மாநதி—பருகி கையில் உறைதல், வாயமுதம் பருகுதல்

மேலுறையும வானவருங் கின்னரரும் விண்ணிலுறை
மேலவரும மண்ணவரு மினறி
விலங்கினொடு கோடினமும் நீபொழிய மினனிசையி
லாழ்ந்துநிலை யோய்ந்துசிலை நிறபச
சேலொளிரும் பூம்புனலி லாழ்ந்தமரை போனறவிணை
நோக்கமதன சோதிதனி லோங்கு
செவ்வியெழு வாயதனி லாழ்ந்துகரும் பங்கிதவழ்
வாணுதவி லாரநிரை யோடு

"உண்பது சொலவி லுலகளந்தான வாயமுதம், கண்படை கொள்ளல் கடலவண்ணன கைத்தலத்தே" – ஆண்டாள்.

பொழியும் இசையின மேனமை · கினனரர்— கீதம் வலலவர். விண்ணில் உறை மேலவர்— நித்யசூரிகள் . பரம பதத்தில் சாமகானஞ் செய்து களிப்பவர்.

விலங்கினொடு கோடு இனமும்—பலவகைப்பட்ட விலங்குகளும் மரங்களும். கோடு : சினையாகு பெயர் நிலை ஒய்ந்து—இயல்பான நிலை நீங்கி; விலங்குகள் அங்கு மிஙகும் ஓடுவன; மரங்கள் காற்றில் அசைவன—இந்நிலையில்லாமல யாவும் எழுது சித்திரங்கள் போல நினறன. "மானகணங்கள் கவிழநதிரங்கிச் செவியாட்ட கிலலா" (பெரியாழ்வார் ) சிலை நிற்ப : சிலைபோல் அசைவே யில்லாமல நீ பெயயும் இனனிசையில ஆழ்ந்து, நிலை ஒய்ந்து, சிலைபோல நிறப.

திருக்கணகளின அழகு. இணைநோககம்—இணைக் கண்கள் இவை தாமரை போல்வன தாமரை, சேல் ஒளிரும் பூம்புனலில் ஆழ்ந்தது· சேல்கள் களிதது அங்குமிங்கும் பாய்ந்து விளஙகும இனிய தண்ணீரில தோனறும தாமரை. சேல் அடர்வது புனலுக்கு இயல்பு; "வங்கக கடல்" எனபது போல

வாயின் செவவி : கண்களின் சோதிதனில் ஓங்கு – கண்களின் ஒளியாலே சிறந்த செல்வி அடர்ந்துள்ள வாய் அதனில் ஆழந்து—பவள வாயிற் பொருந்தி

நுதல : திருநெற்றி. கரும் பங்கி தவழ் வாள் நுதல்—மயிர்க் கறறை. அலைதரும நெற்றி வாள் நுதல ஒளிவாய்ந்த நெற்றி. ஆர நிரை – முத்துக்கள் போல் விளங்கும் வேரவைத் துளிகள் : கணகள, வாய், மயிற்கற்றை இவற்றின் செவ்வியை அனுபவித்து. பூமபுனல் குறிப்பது முகம்.

மேலுலவு மெல்விரல்கள் வேய்ந்தமணி யாழிதழி
னோங்குபுகர் பாய்ந்துசமர் செய்ய
மேவிநடு நினறுகுழல் நாட்டமணி வீசுமொளி
தனனைமிகக் கண்டுகளிப் பாயே

## 95. நேரிசை யாசிரியப்பா

### திருவெட்டெழுத்து

பாய புகரார் வதரியம பதியில்
மேவி முனனம் மேதினி வாழ
நீயே குருவாய் நீயே சீடனாய்
நீயே நல்கினை நின்திரு மந்திரம்.
இம்மனு வேறகு மெழுத்தவை தம்மின
செம்மையி னொவ்வொன றாகித் திகழும்
உருவா யெண்பதி யுகந்து வைகினை
பொருவிலாக் கருணை பொங்கவோ ரருளால

---

திருக்கை விரல்களின் ஒளி . மேல உலவு—குழலின துளை களிலே விரல்கள் மாறி மாறிப பரவுவதால் இவ்விரல்கள் வேய்ந்த மணி ஆழிதமின ஓங்கு புகர—விரலகளில அணிநதுள்ள மணிமயமான மோதிரங்களின ஒளி. பாய்ந்து சமர் செய்ய—வானை நோக்கிப் பாய்ந்து, ‘ எனக்கு நிகர் வானில் இல்லை'' எனறு, ஆங்கு ஒளிரும் சுடர்களோடு போர் செய்ய.

சுழல் நாட்ட மணி வீசும்—சுழலகினற கணமணியின் ஒளி; இதனையும் வேய்ங்குழல் கண்டு. நடுநினறு—கைகளுக்குங் கண் களுக்கும் நடுவே அமைந்து அனறியும் சமாதானஞ் செய்வ தற்காக நடுநிலை பெற்று

வேய்ங்குழலின மேனமை பெருமானது பவளவாயிற் பொருந்தி, வாயிலிருந்து பெருகும மதுவை அருந்தி, நெற்றியில் படருஞ் சுடரையும், கண்மணியின் ஒளியையுங் கண்டு பெறுந் திளைப்பு, நித்திய சூரிகளின திளைப்புப் போல் முடிவறறதாகும்.

95. திருமங்கை யாழ்வார் பெருமானிடத்துப் பெற்ற திருமந்திரத்தின் பொருளை விரிப்பது இது

1—4. வதரியாச்சிரமத்தில் பெருமான் வெளியிட்டது இத்திருமந்திரம். பாய—பரந்த. மேவி—சேர்ந்து, விரும்பி.

இல்வெண் திருப்பதி யாவு மேற்றுள
செல்வியுஞ் சீருஞ் சிறப்புந் திரண்டு
நீயுறை பதியுள் நிற்பன நிலையுற.
வாயுங் கருணை வடிவாய் நீயோ
உலக முதலா யுலக மனைத்தும்
மலர்வரு மங்கையி னருளாற் புரக்கும்
அரும்புக லாவாய்; ஆனற அறிவுடைப்
பெரியோ ருனக்கே யுற்ற பெற்றியர்
தாம்தம தெனறிவை தவிர்த்தே நின்பால்
ஆம்பெரும் பக்தி யடஙகக் கொள்வர்.
அழிவிலா விசுமபு மகவிட மெல்லாம்
வழுவிலா வானோர் மாந்தரு முன்பால்

---

5—11. இம்மந்திரத்தின எழுத்துக்கள் எட்டுள் ஒவ்வோர் எழுத்தாய எட்டுத் திருப்பதிகளில் உறைந்து, மந்திரம் முழுதும் நீயே யாகி இங்கு உறைவாய் செவ்வி—அழகு சீர்—பெருமை. சிறப்பு—அருமை. எட்டுத் திருப்பதிகள்: ஸ்வயம் வ்யக்த ஸ்தலங்கள்—திருவரங்கம், திருவேங்கடம், ஸ்ரீமுஷணம், வானமாமலை, பதரிகாசரமம, புஷ்கரம, நைமிசாரண்யம், ஸாளக்ராமம்.

12—15 நீ கருணைக் கடல. நீயே யாவரையும் காப்பவன். முதல் எழுத்து அ என்பதன் கருத்து, ''அவ—ரக்ஷணே.'' நீயே உலக முதல்வன; இரண்டாவது கருதது.

நீ காப்பது பிராட்டியின் புருஷகாரத்தால்; மலர் வரும் மங்கையின அருளால் பிராட்டியின் சம்பந்தம் காப்பதற்கு அவசியமானது. இந்த எழுத்து அ எனபதன பொருள்: பிராட்டியோடு கூடிய பெருமான உலகுக்குக் காரணம், உலகைக் காப்பவன.

15, 16 அறிவுடையோர் உன்னையே தமக்கு உற்றவனாக நினைப்பர். அறிவுடை: ம என்ற எழுத்தின் கருத்து. உனக்கே உற்றவர்: உ எனற எழுத்தின் கருத்து

இதுவரை விவரித்தது அ, உ, ம என்ற எழுத்துக்களின் கருத்து. இவை மூனறுஞ் சேர்ந்து ப்ரணவம் ஓம் என்பதாம்.

17, 18. நம: என்பதன் கருத்து: நான் எனக்கு உரியேனல்லேன் என்பது. என் உடைமையும் நாராயண னுக்கே உரியன என்பது.

அடங்கும் பெருமையன் நீயே, ஆழ்கடல்
அடங்கும் நீர்தனின் திவலையு ளடங்குவை
உனக்கே யுரிய தென்னுயி ரெனலும்
உனக்கே யடிமை கொண்டே யுனடி
சேருநர் தமபாற் சேரும் பக்தியே
சீருற வோங்கக் களிக்குகு சிந்தையன.
இவ்வண மெனமன மெனறுந் தெளிவுறச
செய்குவை யெனனிற் சீர்திருக் கண்ண
புரமுறை பொனனே! நினனருள
வரமுற வோங்குமுன வானினுஞ் சிறந்தே.

---

தாமதம...கொள்வர்—தாமே யாவற்றிற்கும் உரியவர், யாவும் தம்முடையன எனறு நினையாமல், உய்வதற்கான பக்தி உன்னிடங் கொள்வர்

19—22. நாராயண பதத்தின கருத்து. அழிவிலா விசுமபும—பரமபதம். அகவிடம்—மறறை உலகங்கள், வழுவிலா வானோர்-நிதயசூரிகள்; மாந்தர்—உலகஙகளிலுள்ள உயிர்கள் (பிரமன் முதல எறும்பு வரையில). உனபால அடங்கும்: பிரளயததின் போது. ஆழகடல...அடஙகுவை—சிறிய நீர்த்துளியுள்ளும் நீ உறைவாய. யாவும் உனபாற் கொளவாய்: பஹிர் வ்யாப்தி. யாவற்றுளளும உறைவாய்: அநதர வயாபதி.

நாரம் : அழிவில்லாதனவற்றின திரள்கள் பரமபதம; ஆஙகுளளோர் எப்போதும் அழிவதிலலை. உலகஙகள், உயிர்கள் இவை அழிவனவாயினும், ஆற்றுப பெருககுப்போல் மீண்டும மீண்டுந தோனறுவன, ஆதலால் நிதயமானவை

அயனம் என்பதன கருததுு: யாவறறையும தனனுள் வைப்பவன, யாவற்றுள்ளும் உறைபவன, யாவற்றிற்கும் உறைவிடம, யாவறறுள்ளும் உறைபவன்.

23 24, நாராயணாய எனபதில் ஆய என்பதன் கருத்து. உனககே அடிமை கொண்டு, உன் அடி பக்தி—உன திருவடிகளை வணஙகுவோரிடம் பக்தி கொள்வது "நின் திருவெட்டெழுத்துங் கற்று, உற்றதுமுன் அடியார்க் கடிமை" என்றார் திருமங்கையாழ்வார்.

2ɔ, 30. இவ்வாறு நீ எனக்கு அருள் செய்தால், உன் அருள் வானினுஞ் சிறந்து வரம் உற ஓங்கும்.

## 96. எண்சீராசிரிய விருத்தம்

ஓங்குதிரைப் பவக்கடலும் வற்றி மேலா
மொண்சுடரி னூடுடந் தப்பால் விண்ணுள்
ஓங்குசுடர்ப் பெமமான்றன் னடிய ரோடு
மொழிவினறிப் பணிசெய்நா ளெனறோ? மண்ணில்
ஓங்குபுனல் சூழ்கண்ண புரத்தே தோயு
முத்தமனறன மலரடியை யடியா ரோடும்
ஓங்குபெருங் காதலுடன பரவி யேத்த
லுறுமெனனில் விணடனினும் மேல தன்றோ?

96. திருமந்திரத்தின கருத்தை அனுபவிப்பது. இத்தலத் தினும் திருநாடடிலும் பெறும் அனுபவம்.

"இம்மைப் பிறவி செய்யாதே இனிப்போய்ச் செய்யுந் தவந்தானென்?" என்றும், "ஏரார் முயல்விட்டுக் காக்கைப் பின் போவதே!" எனறும் கூறியவாறு, இப்பிறவியில் அர்ச்சையில் திருக்கண்ணபுரத்திலே பணி செய்யலாமே! பரமபதத்தில் வாழ்ச்சியை விட இங்கு வாழ்வது மேல தன்றோ? "இச்சுவை தவிர யானபோய் இந்திர லோக மாளும், அச்சுவை பெறினும் வேண்டேன" எனறார் தொண்டரடிப்பொடி யாழ்வார்,

திரை ஓங்கு பவக்கடல்—பெரிய அலைகள் வாய்ந்து கொடிய தான பிறவிக் கடல். ஒண் சுடர் மேல் ஆம் ஊடுடந்து சூரிய மண்டலத்திற்கு மேலுள்ள பரமாகாசத்தின் வழியே சென்று, ஓங்கு சுடர் .. என்றோ—ஓங்கும் புகழுடைய பெருமானுடைய அடியாருடன் அவனுக்குப் பணி செய்வது எப்போதோ? இப்போதில்லை என்றபடி

ஆதலால் நாம் சிறப்பாகக் கொள்வது, ஓங்கு புனல்... உத்தமன—நீர்நிலைகள் வளைக்கும் திருக்கண்ணபுரத்தில் தோய்ந்து, உயிர்களுக் கருள்செய்வதே தனது பேறாகக் கொள்ளும் பெருமான. ஓங்கு பெரும் காதலொடு—அக்ரூரர், மாலாகாரர்போல் பேரனபு கொண்டு

உறும் எனனில்: இது பெறக் கூடுமாகில். அருமை குறித்து நினறது. ஐந்தாம் பாட்டில் யாவும் ஓங்கு நிலையிலுள்ளனவாக விவரிக்கப்பட்டது. இங்கு அடியாரது காதலும் ஓங்கு நிலை யிலுள்ளது என்பது குறிப்பு. ஓங்குபுனல்: "ஓ துள்ளுநீர்க் கண்ணபுரம்" என்பது நோக்கு.

## 97. அறுசீராசிரிய விருத்தம்

### அடியாரது மேன்மை

மேலாம் பிறவி பிறந்தாலும்
　　மேலாம் நெறியே நின்றாலும்
மேலாம் முதலின் மலரடியை
　　மேவார் வாழ்வும் வாழ்வாமோ?
மாலாய்ச் கண்ணு புரஞ்சேரும்
　　மாலின தாளிற் படிவாரோ
ஏலாப் பிழைக ளிழைத்தாலும்
　　இமையோர் தம்மின் மேலவரே.

---

97. அடியார்களது மேன்மையைப் பகர்வது பிறவியாலும், ஒழுக்கத்தாலும், ஞானத்தாலும் மேம்பட்டவரேனும் பெருமானது திருவடியை வாழ்த்தாதார் வாழ்வு வாழ்வில்லை. கர்மத்தால் இழிஞரேனும், பெருமானது திருவடிகளிற் படிவோர் நித்யசூரிகளினும் மேம்பட்டவர்கள். "அமரவோ ரங்க மாறும் வேதமோர் நான்கு மோதித், தமர்களில் தலைவ ராய சாதியந் தணர்க ளேலுமம, நுமர்களைப் பழிப்ப ராகில் கொடிப்பதோ ரளவி லாங்கே" எனபது போல இவ்விடத்துக் கூறப்பட்டது.

மேலாம் பிறவி—சிறந்த குலத்தில். மேலாம் நெறி—மேலோர் வகுத்த ஒழுக்கம். மேலாம் முதல—யாவர்க்கும் மேலாகி முதல்வனான பெருமான. மலரடி—தாமரைபோல் அழகிய திருவடி. மேவார்—விரும்பாதவர். வாழவும் வாழ்வாமோ? "ஆன்விடை யே ழனறடர்த்தார்க் காளானார் அல்லாதார், மானிடவ ரல்லரென றெனமனத்தே வைத்தேனே" (திருமங்கை யாழ்வார்).

மாலாய்—பிரேமமே வடிவாகி; அனபரிடத்துப் பிரேமம் வாய்ந்த. நாம் செய்வது: இவ்வாறு பிரேமம் வாயந்தவனிடம் பிரேமம் கொள்வது. "மாலை நண்ணி." மால் - பெரியோன்; பிரேமத்தாலே. மால்—பிரேமம்.

ஏலாப் பிழைகள் இழைத்தாலும்: உம்மை எதிர்மறை. அடியார் இது செய்யார். இமையோர்—நித்யசூரிகள். பெருமானின் திருவுள்ளமும் இதுவே; குனறனைய குற்றஞ் செய்யினுங் குணங் கொள்ளும். பெருமான் கூறுவது: எனனடியா ரதுசெய்யார், செய்தாரேல் நன்று செய்தார்.

## 98. கட்டளைக் கலித்துறை

மேலை யுலகிற் புகிலென்? மிடிவளர் வெந்நரகில்
ஆலைக் கரும்பி னழிந்து வருந்திலென்? ஆலுமயிற்
சோலை விரிதண் கணபுரக் கோன்மது சூதன்றன்
காலைப் பரவிக் குணங்கள் கவித்துயக் கற்றவரே?

## 99. ஒருவிகற்ப நேரிசை வெண்பா

சுற்றவர் போற்றுங் கணபுரக் கார்முகிலே!
அற்றவர்க் காரமுதே! நினனடிபா—லுற்றவரென
சுற்றமு மாருயிருஞ் சூழ்பொருளு மாவரெனின
பெற்றபெரும பேறெதுவோ பின?

---

98 சௌரிப் பெருமானது திருவடிகளை வணிங்கிச் சில குணங்களைப் பாடக் கற்றவர் பரமபதஞ் சேர்ந்தாலென? பிறவியாகிய நரகில் ஆலைக் கரும்பு போல துன்புற்றாலென்? இவன், "நரகமே சுவரக்க மாகும் நாமங்க ளுடைய நம்பி"

மேலை உலகு—பரமபதம். மிடிவளர் வெம் நரகில்—துனபமே வளரும பிறவிகளில, துனபங்களால் பிறவிகள் கொடிய நரகம போல்வன. ஆலைக் கரும்பின அழிந்து—ஆலையிலிடட கருமபுபோல் உருமாறித் துனபுறறு. மயில் ஆலும் சோலை - என்றும மேகம் அடர்வதால மயிலினங்கள் களித்து ஆடும சோலைகள. கோன—நமக்கு இறைவன. மதுசூதன் : நமது துனபங்களை நீக்குபவன என்பது கருத்து. காலைப் பரவி : "உனபாத நிழலலவில் மறறோர் உயிர்ப்பிடம் நானெங்குங் காண்கின்றிலேன" (பெரியாழவார்) "வாஸுதேவ தருச்சாயா"—வாஸுதேவனாகிய கற்பகதருவின நிழல.

99. அடியாரது மேனமையைக் கூறுமிது. கற்றவர் போற்றும் : "கற்றவர்கள தாம் வாழும் கணபுரத்தென் கருமணியே!" (குலசேகரப் பெருமாள்). கார்முகில்—தரம் பாராது அருள் செய்யும பெருமான. அற்றவர்க்கு ஆரமுதே—உனக்கே யாகி அனபு கொண்டவர்கு அமுதம் போனறவனே!

பெருமானைப்போல் அவனது அடியாரும் நமக்கு எல்லாமுமாவர்.

## 100. எண்சீராசிரிய விருத்தம்

பெரும்பரிவிற் பாற்கடலும் பேரரங்கம்
சேடமலை தெனபால் வெற்பும்
விரும்பியுறை மேலவனே! திருக்கண்ண
புரமதனில் மேவி நின்றாய்
அரும்பியெழு பத்துடையா ருள்ளத்து
மார்ந்துளைநீ அடியே னுள்ளம்
அரும்பதியாய்த் தோய்ந்தாயாற் கலம்பகமா
ஆய்ந்தளித்தே னுன்றன் சீரே

---

100. உலகினர் உய்வதற்கே வாழும் உத்தமன நீயாவாய்; உனறன் பரிவோ மிகப் பெரிது என்று பெருமானைப் பாராட்டுவது.

பரிவில்—பரிவாலே, உலகினர்பால். பாற்கடல் : வியூகம்; உயிர்களைக் காப்பதற்கான வகையை ஆராயுமிடம். பேர்—திருப்பேர். சேடமலை - சேஷசைலம்; திருவேங்கட மலை. தெனபால் வெற்பு—திருமாலிருஞ் சோலை மலை. அர்ச்சை நிலை; மற்றைத்தலங்களுக்கு உபலக்ஷணம்.

மேலவன இவன் விட்டுவந்த பரமபதம்; அர்த்தாபத்தியால் இது பெறப்பட்டது. பூர்ணன எனறும் பொருள் கொள்வது : இதனால் தேறுவதும் அர்சசை.

அரும்பி எழும் பத்துடையார்—மலரும் பக்தியுடையவர். ''பத்துடை யடியவர்க் கெளியவன்.'' பக்தியின அளவு கூற வில்லை; ''தவாஸ்மி'' எனறு வாயாற் சொனனாலே போதும்.

உள்ளத்தும் ஆர்ந்தனை : அந்தர்யாமித்வம்.

அடியேன உள்ளம் ''சூதனாய்க் கள்வனாய்'' என்றவாறு இழிவுடைய தமியேனிடத்தும. பரிவின உயர்வு காண்பது பெருமானிடம்; இழிவின ஆழம் காண்பது எனனிடம். அரும்பதியாய் தோய்ந்தாய் — கிடைத்தற்கரியதான ஒரு பதியாகக் கருதி உறைந்தாய். ஆதலால் உன சீரை ஆய்ந்து கலம்பகமா அளித்தேன. பலவகை நிறமுள்ள மலர்களைக் கொண்டு வனமாலை புனைவது போல், பல பலவான செய்யுள் வகைகளையும், சுவை வகைகளையும், உன்றன் ஸ்வரூப, ரூப குணங்களையுங் கலந்து கலம்பகமாகப் புனைந்து உன் திருவடிகளில் ஸமர்ப்பித்தேன். உனறன் சீர் வாழ்க.

தேனி னின்மொழித் தேவியர் தம்முடன்
வானி லார்தரு மந்திரந் தோய்ந்தவன்
கானி லாநிரை மேய்த்த கணபுரக்
கோன வற்கெனக் கூறுவம் வாழ்த்திதே

---

# புராண வரலாற்றுச் சுருக்கம்

## திருக்கண்ணபுரம

[ஸ்ரீபாத்ம புராணம், ஐந்தாவது கண்டம், 96 ஆவது அத்தியாயம் முதல் பதினாறு அத்தியாயங்களின் சுருக்கம்]

### 1. தலத்தின் மேன்மை

திருக்கண்ணபுரம் என்ற திவ்ய தேசம் நெடுங்காலமாக க்ருஷ்ண க்ஷேத்ரம் என்று முனிவர்களால் பாராட்டப் பெற்றது. இது ஸப்த புண்ய ஸ்தலம். இந்த ஏழு புண்யங்கள்: க்ஷேத்ரம் (க்ருஷ்ண க்ஷேத்ரம்), வனம் (க்ருஷ்ணாரண்யம்), புரம் (க்ருஷ்ணபுரம்), விமானம் (உத்பலாவதக விமானம்), புஷ்கரிணி (நித்ய புஷ்கரிணி) ஆறு (காவிரி), கடல் (கீழ்த்திசைக் கடல்). இப்புண்ணியங்கள் யாவும் அமைந்த தலம் இது ஒன்றேயாதலால், இங்கு அஷ்டாக்ஷர மந்த்ரத்தை நியமம் ஒன்றுமின்றியே ஓதி, எளிதில் பயன் பெறக் கூடும்.

இந்தத் தலத்தில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ சௌரிராஜன க்ருத யுகத்தின் ஆரம்பத்தில் பௌர்ணமி, ஹஸ்தம், திங்கட் கிழமை மாலைப் போதில் ஸ்ரீவைகுண்டத்திலிருந்து ஆவிர்பவித்தார் (தோன்றினார்).

இந்த க்ஷேத்ரத்தின் எல்லைகள்: கீழ்த் திசையிலுள்ள கடல், தெற்கில் காகு தீர்த்தம்; மேற்கே ஸார க்ஷேத்ரம், வடக்கில் காவிரியாறு.

### 2. கருட பர்வதம்

இத்தலத்திலிருந்து இரண்டு யோஜனை தொலைவில் கடலில் ஒரு மலை ஆழ்ந்துள்ளது இது கருடனது வடிவங் கொண்டது; கருட பர்வதம் என்ற பெயர் வாய்ந்தது.

முன்பு இந்திரன் மலைகளது சிறகுகளைத் துண்டித்தபோது இந்த மலை கடலில் ஒளிந்துகொண்டது.

கருடன் தனது தாயை அடிமைத் தளையினின்றும் விடுவித்ததால் செருக்குடன் ஆகாயத்திற் பறந்து சென்றான். வழியில் திருக்கண்ணபுரத்தின் மேல்

செல்லும்போது அந்த நகரத்தின் பாலகர்களை (காவலர்களை) அவமதித்துக் கடந்து சென்றான். அவர்கள் இவனது நிழலைப் பற்றி இழுத்தனர். இவன தனது சிறகுகளை இழந்து கடலில் இந்த மலையினமேல் விழுந்தான. இங்கே பெருமானின் திருமந்த்ரத்தை ஓதிக் கடுந்தவஞ் செய்தான ஸ்ரீ சௌரிராஜன் இவன முன் தோனறி, பறக்கும் வலிமையை மீண்டும் அளித்துத் தமது வாகனமாக இவனை மீண்டும் ஏற்றுக் கொண்டார். இப்போதும் கருடன் இப்பெருமான முன்பு கரங்குவித்து வணங்கி நிற்கிறான.

கருடன அமர்ந்து தவஞ்செய்துவந்ததால், இமமலை கருட பர்வதம எனப பெற்றது.

## 3 இநதிரன்

ஸ்ரீ சௌரிராஜனது பேரருளாலே இநதிரன துனபங்கள் யாவுந தீர்ந்து, தனது பதவியை மீணடும் பெறறான.

முன்பு இந்திரனிடங்கோபங்கொண்ட த்வஷ்டா, விச்வருபன் என்ற பேருருவைப் படைத்தார். இநத விசவருபன எல்லையில்லாமல் மேன்மேலும் வளர்ந்து வநததால் இவனால உயிர்களுக்குத் தீங்கு நிகழும் எனறு இநதிரன கவலை கொணடான. இநதிரன தனியிடத்தில தகூர எனபனைக கண்டு, அவனது கோடரியில் தனது வசராயுததநின சகதியைப் புகுரச செய்து, அவனைக் கொண்டு விசவருபனை மாயத்தான

த்வஷ்டா மேலுங் கோபங் கொணடு வ்ருத்ரன எனற அசுரனைப் படைத்தார இந்த அசுரனது வலிமையைக் கண்டு தேவர்கள் ஸ்ரீ சௌரிராஜனைச சரணமாகப பற்றினர். பெருமான் இவர்களது அச்சத்தைத் தவிர்த்து, இவனுடன் நட்புக் கொணடு பழகுமாறு ஆணையிட்டார. தேவர்கள இந்த அசுரனுடன் இயல்பிற் பழகி இவன வேண்டிய வரங்களை யாவும் வரையின்றி அளித்தனர். இவன கோரிய வரங்களுள் முக்கியமானது: இவனுக்குச் சாவு நீரிலோ, நிலத்திலோ, பகலிலோ, இரவிலோ, போர்க் கருவிகளாலோ, விஷத்தாலோ நேரக் கூடாது எனபதாம். இவ்வரங்களைப் பெற்ற வ்ருத்ரன தேவர்

களைப் பலவாறு துன்புறுத்தலானான. ஒருநாள் இவன் கடற்கரையில் மாலை வேளையில் புல்லின்மேல் நிற்பதை இந்திரன் கண்டான இவனை மாய்ப்பதற்கான தருணம் அதுவே என இந்திரனுக்குத் தோன்றியது. இவனது அருகிலுள்ள நுரைக் கட்டியைக் கையிலேற்றுப் பெருமானது மந்த்ரத்தை ஓதி அந்த அசுரன்மீது வீசினான. அசுரன் கீழே விழுந்து மாய்ந்தான

இதன விளைவாக இந்திரனைப் பிரமஹத்தி தோஷம் பற்றியது. ஒரு கொடிய பேயின் வடிவில் இந்த தோஷம் இந்திரனை எப்போதும் பின் தொடர்ந்துகொண்டு வந்தது. இவன் பல தலங்களில் பெருமானை வணங்கினான, பல தீர்த்தங்களில் நீராடினான. எனினும் இப்பேய் இவனைத் தொடர்ந்தே வந்தது. ஒருநாள் இவன திருக்கண்ணபுரம் எனறு நினைத்தான; அப்போதே இப்பேய் விலகியது.

ஸ்ரீ சௌரிராஜன ரிஷிகளை ஏவி இந்திரனுக்கு அசுவமேத யாகம் நடத்தி வைத்தார்; இந்த வேள்வி நித்யபுஷ்கரிணிக் கரையில நடந்தது. இதன பயனாக இந்திரன் கவலை யற்றுத் தனது லகுக்கு மீண்டான

நீடுங்காலமாக இந்திரன தேவலோகத்தில் இல்லாததால், தேவர்கள் நகுஷனை இந்திரப் பதவியில் அமர்த்தினர் இந்திரன் இவனைக கண்டு பெரிதும அஞ்சி, வடதிசையை நோக்கி ஓடினான்; அங்கு இமயமலைச சாரலில் ஒரு தடாகத்தில் தாமரைத் தண்டில் ஒளிந்துகொணடான.

இந்திரப் பதவி யேற்ற நகுஷன பெரிதுஞ் செருக்குற்று, இந்திராணியிடம் மோகங்கொண்டான்; அகஸ்த்ய முனிவரை அவமதித்தான; ஆதலால் மலைப்பாம்பாகத் தரையில் விழுந்தான. ஸ்ரீ சௌரிராஜனது அருளாலே இந்திராணி, இந்திரனைக் கண்டு, அவனுடன் மீண்டாள். இந்திரன் தன் பதவியை மீண்டும் பெற்றுத் தேவர் கணங்களுடன் ஸ்ரீ சௌரி ராஜனை வலம் வந்து, பெருமான் விஷயமாக

உத்பலாவதகே திலயே விமாநே புஷ்கரேக்ஷணம் |
சௌரிராஜ மகம் வந்தே ஸதா-ஸர்வாங்க ஸுந்தரம் ||

என்ற சலோகத்தை வெளியிட்டான.

## 4. விகடாக்ஷ வதம்

முன்பு க்ருஷ்ணாரண்யத்தில் முனிவர் கூட்டங் கூட்டமாக அமர்ந்து தவஞ் செய்து வந்தனர். அசுரர்களது தலைவனாகிய விகடாக்ஷன அசுரர்களுடன இத்தலத்திற்கு வந்து முனிவர்களைக் கொன்று வந்தான. இந்த அசுரர் புலிகளாகவும்,காட்டுப் பன்றிகளாகவும்,காட்டெருமைகளாகவும் இவ்வாறு கொடிய விலங்குகளின வடிவ மேற்று முனிவர்களைத் தாக்கிக் கொன்றனர்.

முனிவர்களைக் காக்கத் திருவுளங் கொண்ட ஸ்ரீசௌரி ராஜன, இவவிலங்குகளை வேட்டையாடுவதற்காக வேடுவனது உருவ மேற்றார். கருட பகவானைக் குதிரையாகக் கொண்டு, கையில் வில ஏந்தி ஊர்ந்து சென்றார். விஷ்வக்ஸேனர் கையில் ஈட்டி ஏந்திப் பெருமானைத் தொடர்ந்து சென்றார். ஸ்ரீவைகுண்டத்திலுள்ள நித்யசூரிகளும், பிரமன, சிவன, இந்திரன முதலிய தேவர்களும் பெருமானுக்கு உதவிசெய்யப் பின்சென்றனர்

விகடாக்ஷன தனது இயல்பான வடிவில பெருமானுடன கடும்போர் செய்தான, பலவகைக் கணைகளைப பொழிந்தான்; சக்திகள் பலவற்றையும் எய்தான் இறுதியாக ப்ரஹ்மாஸ்த்ரத்தைக் கையிற் கொண்டான. ஸ்ரீசௌரிராஜன தனது சக்ராயுதத்தை ஏவ, அது விகடாக்ஷனை நொடிப் போதில் மாய்த்தது

விகடாக்ஷனுடன போர் செய்யும்போது பெருமான் வில்லும், சக்கரமும், தண்டும், சங்கமும, ஏந்திச சென்றார். இப்போது பெருமானது திருக்கையில சக்கரம் ப்ரயோக நிலையில்—அதாவது தாக்கும நிலையில் விளங்குகிறது திருமங்கையாழ்வார் இப்பெருமானைப் பற்றிய பாசுரங்கள் தொடங்கும்போது, ''சிலையிலங்கு பொன்னாழி திண்படை தண்டொண் சங்கம்'' என்றும், 'செருவரை முன்னாசறுத்த சிலை'', என்றும், ''பொருவரை முன் போர்தொலைத்த பொன்னாழி'' என்றும் பாடுகிறார்

## 5. நித்ய புஷ்கரிணி

முன்பு உத்தராயண புண்ய கால மொன்றில் சித்தச்ரவஸ் என்ற பாண்டியன் தன பரிவாரங்களுடன் தாம்ரபர்ணியில் நீராடச் சென்றான். தனது மகளான உத்தமியுடன் இவன் நீராடும்போது, எதிர்பாரதவாறு வெள்ளம் பெருகி நொடிப் போதில வற்றியது. மன்னனையும் உத்தமியையுங் காணாமல் பரிவாரங்கள் துன்புற்றுத் துடித்தனர் அமைச்சரும் மன்னனது புதல்வரும் மிகவும் கலங்கிக் கவலை கொண்டனர்.

ஏழாவது நாள் நடுப்பகலில் அந்தணன் ஒருவன் பாண்டியனது அரண்மனைக்கு வந்தான்; மன்னனும் உத்தமியும் திருக்கண்ணபுரத்தில் இருப்பதாகக் கூறித் தான் அகஸ்தியரிடம் கேட்ட தொன்றை விவரமாக ஓதினான.

அகஸ்த்யர் வெளியிட்டது நான உத்தராயண புண்ய காலத்தில் தீர்த்தங்களில் நீராடச் சென்றேன். தீர்த்தங்களில் தண்ணீர் வற்றி யாவும் மணல்மயமாயின. நான் மீளும்போது இவையாவும் திருக்கண்ணபுரத்தில் நித்ய புஷ்கரிணியில் விளங்கக் கண்டேன். தேவர்கள் இதன துறைகளில் நீராடி ஸ்ரீ சௌரிராஜனை வணங்கினர். அப்போது பாண்டியனையும் உத்தமியையும் அங்குக் கண்டேன். இந்த நித்ய புஷ்கரிணியின் பெருமை: உத்தராயண புண்ய காலத்தில கங்கை, யமுனை, புஷ்கரம் போன்ற தீர்த்தங்கள் யாவும் தங்களது முழு அம்சத் துடன் இதில் விளங்குகின்றன; மற்றை நாட்களில் ஓர் அம்சத் துடன் உறைகின்றன உத்தராயண புண்ய காலத்தனும், முதல் நாளும் மறுநாளும் இப்புஷ்கரிணியில் நீராடி யாவகை நலன்களும் பேறுகளும் பெறக்கூடும் இதில் இரவு, பகல் என்ற காலவரை இல்லாமல் எப்போதும் நீராடிப் பலன பெறலாம். ஆதலால் இது நித்ய புஷ்கரிணி எனப்பெறும்

ஸ்ரீ சௌரிராஜனது ஆணைப்படி உத்தமிக்கும் சோழ மன்னனது மகனுக்கும் திருமணம் நிகழ்ந்தது.பாண்டியனுக்கும் சோழனுக்கும் ஸ்ரீசௌரிராஜன் திருவஷ்டாக்ஷரம் உபதேசஞ் செய்தார்

## 6. உபரிசர வசு

முனபு சேதி நாட்டை ஆண்டுவந்த வசு என்ற மன்னன இந்திரனுடன நட்பு வாயநது, அவன அளித்த விமானத்தில் வானில சஞ்சரிக்கும் வாய்ப்பும் பெற்றான், ஆதலால் உபரிசர வசு எனறு யாவராலும் பாராட்டப் பெற்றான

இந்திரன் நித்ய புஷ்கரிணிக் கரையில் அசுவமேதம் நூறு இயக்க விருமபினான; வசுவை அழைத்து, தேவலோகத்தில் அசுரர்கள் புகாமல் காக்குமாறு வேண்டிககொண்டான. இவன் வேள்விக்காக தீக்ஷை ஏற்றபோது, அசுரர் தேவர்களைத் துன்புறுத்தினர். வசு தனது போர்வீரர்களுடன தேவலோகஞ் சென்று அசுரர்களை வென்று தன் நகருககு மீண்டான்.

பூமியில் இறங்கும்போது, பசியும் தாகமும் மேலிட்டு இவன் ஓரிடத்தில் ஒரு தினைப் புனமுந தடாகமும் இருக்கக கண்டான. புனத்திற் புகுந்து தினைக் கதிர்களைக் கொய்யும் போது, அப்புனத்தின காவலன இவனைத் தடுத்தான். வசு தினைக் கதிர்களைக் கொய்ததால அககாவலன இவன் மீது கணைகளை எய்தான. இதுவரையில் போரில் தோல்வியே கொள்ளாத வசு, தனது வலிமை குறைந்ததால, அக்காவலன் ஸ்ரீமந் நாராயணனே எனத் தேறிச் சரணம புகுந்தான். தனக்கு முன் நிற்கும காவலன ஸ்ரீ சௌரிராஜன எனறும், புனத்தி லுள்ள தினைக் கதிர்கள் முனிவரர்கள் என்றுந் தெரிந்து கொண்டான.

ஸ்ரீ சௌரிராஜனது அனுமதி கொண்டு, வசு அத்தலத்தில் க்ருஷ்ணபுரம் என்ற நகரை நிர்மாணித்து அதன நடுவில் திருக்கோயிலை அமைத்தான. பெருமானை ஆராதிப்பதற்காக அடியார்களை நியமித்தான. இந்த நகரம் ஐந்து ப்ராகாரங்கள் கொண்டு, வசதிகள் யாவும் பெற்று விளங்கியது.

முனிவரது சாபத்தால் வசு சிறிது காலம் பாதாளத்தில தங்க நேர்ந்தது. இவன எப்போதும் ஸ்ரீ சௌரிராஜனையே நினைத்து வந்ததால், யாதொரு துனபமு மிலலாமல் வாழ்ந்து வந்தான ஸ்ரீ சௌரிராஜனது ஆணைப்படி கருடபகவானுடன் இவன் பாதாளத்திலிருந்து வெளிவந்து திருக்கண்ணபுரத்தில் மூக்தாகரம் என்ற பொய்கையிலிருந்து வெளிவந்தான். ஸ்ரீ சௌரிராஜனிடம் திருவஷ்டாக்ஷர மந்த்ர உபதேசம் பெற்றான்.

## 7. பூத வடம்

ஸ்ரீ சௌரிராஜனது திருக்கோயிலின் தென புறத்தில் ஒரு தடாகம் உள்ளது; இதைக் காப்பது ஒரு பூதம்; ஆதலால் இது பூதவடம் என்ற பேர் வாய்ந்தது. இந்தப் பூதம் உலகம் தோனறிய போதே தோன்றியது; வடக்கு நோக்கி நின்று எப்போதும் ஸ்ரீ சௌரி ராஜனையே தியானஞ் செய்து வருகின்றது.

முன்பு தக்ஷமுனிவனது சாபத்தால் சந்திரனை க்ஷய ரோகம் பற்றிக் கொண்டது. திருப்பாற்கடலுக்கு அதிபதியான ஸமுத்ர ராஜன், தன மகனான சந்திரனைக் காப்பாற்றுவ தற்காக ஸ்ரீ சௌரிராஜனைச் சரணமாக அடைந்தான இப்பெருமானது ஆணையால் இந்தப் பூதம் சந்திரனைப் பிடித்துக் கொண்டு வந்து, கோர வடிவிலிருந்த ரோகத்தைத் தன் காலின கீழிட்டுத் துவைத்து வெருட்டித் துரத்தியது. சந்திரனை அந்தத் தடாகத்தில் நீராட்ட செய்து, பரமசிவனிடத்துச் சென்னியிற் சூட அளித்தது.

இந்தத் தடாகத்தில் நீராடுவோர் எவ்வகைக் கொடிய நோயாயினும், நோய் நீங்கி இனபுறுவர்

## 8. பத்மினித் தயார்

உபரிசர வசு சேர மனனனின மகள் சுநதரியை மணநது கொண்டான. நெடுங்காலமாக மகப்பேறில்லாமல், இவன் வசிஷ்ட முனிவரை வணங்கி, அவரது ஆச்ரமத்தில் அவருக்கான பணிவிடைகள் செய்து வந்தான். இம்முனிவரது ஆணைப்படி அச்வமேத யாகமும், மகவுப்பேற்றுக்கான யாகமும் செய்தான். வேள்வித் தீயிலிருந்து ஒரு தேவன் தோன்றி, இவனிடம் இரண்டு செங்கமுநீர் மலர்களை அளித்து, அவற்றைச் சுந்தரி முகர்ந்தால் ஓர் ஆண் மகவும் ஒரு பெண் மகவும் பெறுவாள் என்று கூறிந் தழலில் மறைந்தான்

சுநதரி அமமலர்களை ஆவலுடன் முகர்ந்து கருவுற்றாள்; ஓர் ஆண் மகவும் ஒரு பெண் மகவும் பெற்றாள். பெண் மகவின் மேனியில் தாமரை மலரின் மணம அடர்ந்திருந்ததால், வசிஷ்ட பகவான அதற்குப் பத்மினி என்று பெயரிட்டார்; இப்பெண் மகவுடன் பிறந்த ஆண் குழந்தைக்குப் பத்மன என்று பெயரிட்டார்.

முளைக்கும் போதே பரிமளங் கொள்ளும் துளசிச் செடி போல், குழந்தைப் பருவத்திலேயே பத்மினி பெருமானிடம் பக்தி வாய்ந்தவளாய் வளர்ந்து வந்தாள். தனது தகப்பன் பெருமானுக்குத் திருவாராதனஞ் செய்யும்போது அருகிருந்து கண்டு மகிழ்வாள், பெருமானது திவ்ய சரிதங்களை ஆவலுடன் கேட்பாள்.

திருமணத்திற்குரிய பருவத்தில் இவளது மனம் ஸ்ரீ சௌரி ராஜனையே நாடியது. ஒரு நாள் கனவில் இப்பெருமான் இவள் முன் தோன்றி இவளை அணைப்பதற்காகத் திருக்கரங்களை நீட்டினான். இவளுந் தன் கரங்களை நீட்ட, இவை தளர்ந்தன. ஆதலால் இவள் மிகவும் மனங்கலங்கி, இப்பெருமானது திருநாமங்களையும் கல்யாண குணங்களையும் பிதற்றி வந்தாள். நாளடைவில் ஊணும் உறக்கமும் இல்லாமல் உடல் மெலிந்தது. வசு மன்னன் கவலையுற்று, இவளுக்கான சுயம்வரம் நிகழ்த்த விரும்பினான். பத்மினியின் மனம் ஸ்ரீ சௌரி ராஜனையே நாடியது. இவள் இப்பெருமானிடம் தனது அளவு கடந்த காதலை வெளியிட்டு, இவன் தன்னை மணந்து கொள்ளாவிடில் தன்னை மாய்த்துக் கொள்வதாகக் கூறினாள். அர்ச்சை நிலையிலுள்ள பெருமான் இவளை மணந்து கொள்வது எங்ஙனம் என்று மனம் கலங்கினான், வேந்தன். ஆனால் பத்மினியோ, இப்பெருமான் தன்னை மணந்து கொள்வது திண்ணம் என்று உறுதியாகக் கூறினாள். இவளது மனத்தை மாற்ற மன்னனும் தோழிமாரும் பலவகையாக முயன்றும் பயனில்லை.

இவ்வாறு மன்னன் கவலைப் பெருங்கடலில் ஆழ்ந்து செய்வதறியாமற் கலங்கும்போது, இந்திரனது தூதர் இவனிடம் வந்தனர்; தேவர்களை அசுரர்கள் மீண்டும் துன்புறுத்திவருவதாகவும், இந்திரன் இவனது உதவியை நாடுவதாகவுங் கூறினர். வசு தேவலோகத்திற்குச் சென்று, அசுரர்களை வென்று மீளும்போது முன்போல் பசியால் துன்புற்றான். தரையில் இறங்கும்போது தான் திருக்கண்ணபுரத்தில் இருப்பதாக உணர்ந்தான். சீர்குலைந்திருந்த அந்த நகரத்தைப் புதுப்பித்து இவன் பெருமானை வணங்கி நின்றான். ஸ்ரீ சௌரி ராஜன் மிகவும் மகிழ்ந்து இவனுக்கு வேண்டிய வரங்களை வழங்குவதாகக் கூறினார். வசு தனது மகளின் மன நிலையைப்

பெருமானிடம் விண்ணப்பஞ் செய்தான. பெருமான் கூறியது: அரசே! கவலைப் படவேண்டாம. நாமே இவளுக்கு இத்தகைய பக்தியை அளித்தோம். இவளது விருப்பப்படி நாமே மானுட வடிவில், நாடும் நகரமுங் காண மணந்து கொள்வோம் — என்று.

மன்னன் பெரிதும் மகிழ்ந்து திருமணத்திற்கான நன்னாளை ஆய்ந்து திருமண வோலை நாடு முழுதுமுள்ள அதிபர்க்கு அனுப்பினான்; வசிஷ்ட பகவானை வணங்கித் திருமணத்தை நடத்தி வைக்குமாறு இறைஞசினான்; தனது அமைச்சருடனும் சுற்றத்தாருடனும் திருக்கண்ணபுரத்திற்கு வந்தான; திருமணத்திற்காக இந்நகரைச் சிறப்புற அலங்காரஞ் செய்தான. தேவர்களும் மன்னர்களும் முனிவர்களும் இத்திருமணத்தைக் காணத் திரண்டனர்

வைகாசி மாதம், பூர்ணிமை, அநுஷ நக்ஷத்ரத்தில் ஸ்ரீ சௌரி ராஜன் பத்மினியை மணந்து கொண்டார் ஸ்ரீதேவி, பூதேவி, நீளா தேவி இவர்கள் வதுவரர்களுககு மங்களம் ஓதினர் ஸ்ரீதேவி பத்மினியை அணைத்து, "நீ கவலை கொள்ள வேண்டா, எம்முடன நீயும் எனறும் உறைந்து பெருமானின பேரனபைக் கொள்வாய்" என்றாள்.

பத்மினித் தாயார் பெருமானது வலப் பக்கத்தில் மகிழ்ந்து உறைந்திருப்பதை இப்போதும் நாம் காணலாம் இந்தத் திருக்கல்யாணத்தின நினைவாக ஆண்டு தோறும் வைகாசித் திருநாள், எட்டாம் திருநாள் மாலையில் திருக்கலயாண உத்ஸவம் முனபோற் சிறபபாக நிகழ்கின்றது

## 9. திருவஷ்டாக்ஷரம்

பர்வதங்களின் சிறகுகளைச் சிதைத்து வந்து இந்திரனிட மிருந்து தப்பித்துக் கொண்ட கருட பர்வதம், கடலில் ஆழ்ந்திருந்தது. க்ருஷண க்ஷேத்ரத்தின் மகிமையால் இந்திரன் கடலுட் புகுந்து இம்மலையின் சிறகுகளைச் சிதைக்க இயல வில்லை; ஆதலால் இது வெளிவருவதை எதிர்நோக்கி இந்திரன் தனது வஜ்ராயுதத்துடன் கடற்கரையில் தங்கியிருந்தான். இப்பர்வதம் திருவஷ்டாக்ஷரத்தை ஜபித்துக் கொண்டு ஸ்ரீ சௌரி ராஜனை வணங்கி வந்தது. இதனால் பெரிதும் களிப்புற்றுப் பெருமான் இந்தப் பர்வதத்தின் முன் தனது திருமேனி ஒளியுடன்

தோன்றினார்; புன்முறுவலுடன் அம்மலையை நோக்கிக் கூறினார்: "நீ செய்து வரும் திருவஷ்டாக்ஷர ஜபத்தாலே நாம் பெரிது முகந்தோம். ஏழு கோடி மந்த்ரங்களுள் சிறந்ததான திருவஷ்டாக்ஷரத்தை எழுத்து ஒவ்வொன்றுக்கும் ஒரு லக்ஷம் வீதம் உருச் செய்தால் நாம் ப்ரத்யக்ஷ மாவோம். இன்று உன் முன் தோன்றினோம் உனது விருப்பத்தை உரைப்பாய்" பரவதம், "பெருமானே! தேவரீர் விகடாக்ஷனை வதஞ் செய்த திருமேனியுடன் உம்மைக் காண வேணும்" என்றது. பெருமான் ப்ரயோக சக்கரத்துடன் காட்சியருளினார். பெருமானது வலக் கரத்தில் தோள் வளை விளங்கக் கண்டு, அம்மலை வியப்புற்றது. பெருமான் கூறியது: "முன்பு பாண்டியன் நமக்கு இத்தோள் வளையை அளித்தான்; இதை அணிந்து கொள்ளும்போது, முன் கையிலே அழகுடன் விளங்கக் கண்டு, அவன் தோள்வளையை இவ்வாறே அணிந்து கொள்ள வேணும் என்றான்; அவனது விருப்பத்திற்கேற்ப நாம் இவ்வாறே அணிந்து வருகிறோம்."

மேலும் ஸ்ரீ சௌரி ராஜன அந்தப் பர்வதத்திற்கு இங்ஙனம் வெளியிட்டார்: ஸ்ரீரங்கம், திருவேங்கடம், ஸ்ரீ முஷ்ணம், வானமாமலை, சாளக்ராமம், புஷ்கரம், பத்ரிகாச்ரமம், நைமிசாரண்யம் ஆகிய எட்டு ஸ்வயம் வ்யக்த ஸ்தலங்களில் நாம் திருவஷ்டாக்ஷரத்தில் ஒவ்வோர் எழுத்து வடிவமாக விளங்குகின்றோம். இந்தத் திருகண்ணபுரத்தில் மந்த்ரம் முழுதும திருமேனியாக இலங்குகிறோம். இந்தத் தலத்தில் திருவஷ்டாக்ஷரத்தை ஜபம் செய்வதற்கான நியமங்கள் வேண்டா; பக்தியோடு இம்மந்த்ரத்தை உச்சரித்தால் எல்லா நலனும் பெறக் கூடும். இம்மந்தரத்தை ஓதி இயன்றவரையில் தான தர்மங்களைச் செய்வது நல்லது.

இந்தப் பர்வதத்திற்குக் காட்சியருளுவதற்கென்வெ பெருமான் ஒவ்வோராண்டும் மாசி மாதம் பௌர்ணமியன்று கருட வாகனத்தில் எழுந்தருளுகிறார்.

ஸ்ரீ சௌரிராஜனது பேரருளைப் பெறுவது மிகவும் எளிது. நித்ய புஷ்கரிணியில் நீராடி அதை வலம் வருவதும், உத்பலாவதக விமானத்தை வலம வருவதும், அஷ்டாக்ஷரத்தை ஜபிப்பதும் பெருமானது உகப்பிற்காவன.

## 10. தலத்தின் மகிமை

க்ருஷண க்ஷேத்ரம், க்ருஷ்ணாரண்யம், நித்ய புஷ்கரிணீ இவை பாவங்களைத் தீர்ப்பன. நித்ய புஷகரிணியில் நீராடு வோர்க்கு மறுபிறவி எனபதில்லை. அமாவாஸ்யையில் இதில் நீராடிப் பிதிர்களுக்குத் தர்ப்பணம் செய்தால், பிதிர்கள் பெரிதும் உகப்பர. இதன் தீர்த்தத்தால் பெருமானுக்குத் திருமஞசனம் செய்விப்பது சாலச சிறந்தது; பரமபதத்தை அளிக்கும். இதன தீர்த்தத்தைப் பானஞ்செய்தால் உடற்பிறவி இனியில்லை இதில் நீராடி, உத்பலாவாக விமானத்தை வலம் வந்து,

ஐசவர்யம் தேஹி பகவந்! அநதே தவ பதம் ச மே |
உத்பலாவதகாதீச! ஸ்வாமிந! ஸர்வேசவ ரேசவர! ||

என்று ஜபம் செய்து, இவ்வுலகில் இன்பமும், பெருமானது ஸ்ரீ வைகுண்டமும் பெறலாம்.

க்ருஷணபுரத்தில் ஒருநாள் தங்கியிருந்தாலும், முக்தி பெறலாகும. இந்தத் தலத்தை நினைத்தாலும், க்ருஷ்ணபுரம் எனறு ஒரு முறை சொனனாலும, இதைக் குறித்து ஓரடி எடுத்து வைத்தாலும், பெருமானுடைய பேரருளால் பரமபதத்தைப் பெறகூடும.

' திருக்கண்ணபுரம் சொல்ல, நாளுந் துயர் பாடுசாராவே'' எனறார், நம்மாழவார்.

புண்ணியங்க ளேழாற் பொருவில்லாச சீருடைய
கணணபுரப் பெமமான் கழல்தொழுது கண்ணனைய
எடடெழுத்தை யோத இருவினைக ளிவ்வுவகில்
இட்டமுத்தா நம்மை யினி.

# எனது நூல்கள்

**கவிதைகள்**

| | |
|---|---|
| திருக்கண்ணபுரச் செய்யுட் கோவை | ஸ்டார் பிரசுரம் |
| திருக்கண்ணபுரச் செல்வன் | திருவல்லிக்கேணி |
| திருக்கண்ணபுரக் கலம்பகம் | ,, |
| இராமாயண வெண்பா | ,, |
| கண்ணன் அவதார வெண்பா | ,, |
| திருமால் அவதார வெண்பா | ,, |
| கீத கோவிந்தம்—தமிழாக்கம் | ,, |
| ஆழ்வார்கள் வரலாறு | ,, |
| வைணவ ஆசாரியர்கள் 1 – 3 | ,, |

முதறபதிப்பாக வெளிவந்துளளவை

திருக்கண்ணபுரம் புராணம்—உரை
திருவல்லிக்கேணிப் புராணம்
திருவல்லிக்கேணிப் பெருமான் பொன்னூசல்
திருவல்லிக்கேணிப் பெருமான் பிள்ளைமை யின்பம்
பதுமினி பரிணயம்
திருக்கண்ணபுரப் பெருமான பிள்ளைமை யினபம்
திருவேங்கடவன பொனனூசல்
திருவல்லிக்கேணிப் பெருமான மேகவிடு தூது

அருளிச செயலகளுக்கு உரை

| | |
|---|---|
| திருப்பாவை | பைலட் பப்ளிகேஷன் |
| நாச்சியார் திருமொழி | சென்னை |
| பெரியாழ்வார் பாடிய பிள்ளைத்தமிழ் | ,, |
| விஷ்ணு ஸஹஸ்ர நாம உரை | ,, |
| பெரிய திருமொழி | ஆழ்வார்கள் அமுத |
| திருவெழுகூற்றிருக்கை, திருமடல்கள், திருக்குறுந்தாண்டகம், திருநெடுந் தாண்டகம் | நிலையம்-சென்னை-2 ,, ,, |
| முதல் மூன்று திருவந்தாதிகள் | ,, |
| நான்முகன் திருவந்தாதி, இராமாநுச நூற்றந்தாதி | ,, |
| கத்ய த்ரயம் | |

